# அம்மா

## கவிஞர் வாலி



**கலைஞன் பதிப்பகம்**

10, கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை – 600 017.

# பதிப்புரை

குழந்தை பாலூறும் வாயால் முதலில் உச்சரிக்கும் மூலமந்திரம் அம்மா.

சொல்லச் சொல்ல இனிக்கும். இனிய அன்னையின் நினைவுகள் இதழ் விரிக்கும்.

மண்ணுக்கு வரத் தவமிருந்த திருத்தலம் அன்னையின் மணி வயிறு. அன்பு, கருணை, தியாகம் என எண்ணரும் மேன்மைகள் அத்தனையும் அநுபவமாகப் பெற்ற குருகுலம் அது.

'அன்னை வடிவமடா இவள் ஆதிபாரா சக்தியடா இவள் இன்னருள் வேண்டுமடா' என தாயைப் பணிந்து நிதம் போற்றுவான் மகாகவி.

'பால் நினைத்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து நீ' என அம்மையப்பனின் அருட் கருணைக்கு உவமிப்பதும் அம்மாவைத் தானே!

அத்வைத ஞானி ஆதிசங்கரர் பெற்ற தாய்க்கு பிள்ளையாய்க் கடனாற்ற ஓடிவரச் செய்ததும் அம்மாதான்.

'செய்ய இரு கைப்புறத்தில் ஏந்திக் கனிந்தமுலை தந்தாளை எப்பிறப்பில் காண்பேன் இனி' என இன்னொரு துறவி பட்டினத்துப் பிள்ளையும் துறக்கவொண்ணாது அம்மாவை என்ற ஒரு நிதர்சனம்.

விழிப்புற்ற நாள் முதலாய் இந்த வழிபாடு உதிரத்தில் ஊற்றெடுத்து வரும் பிரவாகம்.

அந்த அன்புப் பிரவாகத்தின் உருவகமாக தனது முதற் கவிதைத் தொகுதிக்கு 'அம்மா' வென மகுடமாகச் சூட்டியுள்ளார் கவிஞர் வாலி.

'உணர்ச்சியும் ஓசையும் ஒருங்கிணைந்து பீறிட்டு வெளிப்படுவது கவிதை' என்றார் பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை.

அத்தகைய உணர்ச்சி இத்தொகுப்பில் பரக்கக் காணலாம்

பொன்னிவலம் சுழித்துவரும் பொன்னார் திருவரங்கப் புதல்வர் கவிஞர் வாலி. இங்கு கரை காணாத கவிதைப் பிரவாகம். 'அம்மா' தொகுதி எங்கணும் சிறக்கக் காணலாம். நெஞ்சைத் தொடும் கவிதைகள் நினைவில் நிரந்தர சித்திரமாகி விடும்.

இதனை வெளியிட அனுமதியளித்த கவிஞருக்கு நன்றி கூறுகிறோம்.

-நந்தா

# அணிந்துரை

*வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந்நாதன்*

இப்போது கவிதைக்கு யோகம் அடிக்கிற காலம். புதுக் கவிதைகளைப் பலர் இயற்றிப் பரப்பி வருகிறார்கள். அங்கங்கே கவியரங்கங்கள் நடைபெற்று வருகின்றன. தமிழில் தோன்றியுள்ள புது மலர்ச்சியில் புதுக் கவிதையின் தோற்றம் ஒரு கூறு ஆகும். மதுரைப் பல்கலைக்கழகத்தில் அண்மையில் புதுக்கவிதை பற்றிய கருத்தரங்கு ஒன்று நடைபெற்றது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் இப்படி நடந்திருந்தால் பலர் கண்டனக் குரலை எழுப்பியிருப்பார்கள்.

மரபு வழிக் கவிதைகளும் புதியனவாக வருகின்றன; மரபைப் பற்றிக் கவலைப்படாத கவிதைகளும் வருகின்றன. புதுமை வரவேற்கத் தக்கதுதான். ஆனால் அதற்கும் ஓர் ஒழுங்கு இருக்க வேண்டும்.

தமிழில் கவிதை தோன்றியது எப்போது என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாது. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழில் வளமான கவிதை இருந்திருக்க வேண்டும். இவ்வளவு காலமாக உள்ள கவிதை அன்றிருந்த வடிவத்தோடே இருந்து வருகிறது என்று சொல்ல இயலாது. காலந்தோறும் கவிஞர்கள் புதிய புதிய வடிவங்களைப் படைத்தார்கள். இசையோடு இணைந்த பாடல்கள் சிலப்பதிகாரத்திலும் தேவாரத்திலும் திவ்யப் பிரபந்தத்திலும் இலக்கிய மதிப்புடன் விளங்கு கின்றன. பிற்காலத்தில் விருத்தத்தின் வகைகள்

பலவாகப் பல்கிய பிறகு புலவர்கள் இயற் பாக்களையே இயற்றி வந்தார்கள். பல காலங் கழித்து மீட்டும் இயலும் இசையும் கலக்கத் தொடங்கின. குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் என்ற சிறு நூல்களில் இசைப் பாடல்களும் சேர்ந்து இலக்கியச் சுவையைத் தந்தன. பாரதியார் சிந்து என்னும் வகையை இலக்கியச் சுவையோடு பாடினார். புதிய புதிய இசை வடிவங்களை அமைத்தார். அவரைப் பின்பற்றிப் பாரதிதாசன், கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை முதலிய பலரும் இசைப் பாடல்களை இலக்கியத் தரம் உடையனவாகப் பாடினார்கள். இப்போதும் பல கவிஞர்கள் பாடி வருகிறார்கள்.

வானொலி, சினிமா, பத்திரிகைகள் இந்த மூன்றினாலும் புதுக் கவிதைகள் பரவி வருகின்றன. சினிமாத்துறையில் பாடல்கள் எழுதிப் பெயர் பெற்றவர் திரு. வாலி அவர்கள். இவர் சினிமாப் பாடல்கள் அல்லாத வேறு பல கவிதைகளையும் எழுதியிருக்கிறார். அவற்றில் பலவற்றைத் தொகுத்து 'அம்மா' என்ற பெயருடன் இந்தப் புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார்.

இந்தத் தொகுதியில் பலவகையான விருத்தங்களும் அகவலும் அமைந்திருப்பதோடு இசைப் பாடல்களும் உள்ளன. மாது, பக்க வாத்தியம், கள்ளும் பெண்ணும் போன்ற கவிதைகள் இசைப்பா வகையைச் சேர்ந்தவை. இந்தத் தொகுதியில் உள்ள கவிதைகளைப் படித்து முடிக்கும் போது நம் மனத்தில் பதிந்து நினைவில் நிற்பவை இவர் அடுக்கடுக்காக எடுத்துக் காட்டும் உருவகங்களும் உவமைகளும்.

எழுத்தறிவித்த ஆசானை வண்ணான், குயவன், தோட்டி, உழவன், கருமான் என்று சொல்கிறார். ஆனால் காரணத்தோடு உருவகப்

படுத்திச் சொல்கிறார். அழுக்கு மனத்தை வெளுப்பதனால் வண்ணனாகிறான் ஆசான். எண்ணம் என்னும் மண்ணைப் பிசைந்து வண்ணப் பாண்டம் வனைவதால் குயவனாகிறான். குப்பை மதியைக் கூட்டிப் பெருக்கித் துப்புரவாக்கிக் காட்டுவதனால் தோட்டியாகிறான். கொத்திக் கிளறிப் புத்தியில் நல்ல வித்தை எடுத்து விதைப்பதால் உழவனாகிறான். வளையா நெஞ்சை வகுப்பறையென்னும் உலையில் அடித்து வளைப்பதனால் கருமானாகிறான்.

அவனே கல்விச் செல்வம் அள்ளியிறைக்கும் வள்ளலாகவும்; ஊரார் பெற்ற பிள்ளைகளன்பைப் பேராதரவாய்ப் பேணும் தந்தையாகவும்; ஞானப் பாலை ஏட்டின் வழியே ஊட்டும் அன்னையாகவும் இருக்கிறான்., இப்படிப்பல உருவகங்களை அழகாக அமைக்கிறார்.

தேவி கருமாரியை அருள் வெள்ளம் வற்றாத கேணி என்றும், மட நெஞ்சை மேல் ஏற்றும் ஏணி என்றும், கருமக் கடலைத் தாண்டிக் கரையேற்றும் தோணி என்றும், தருமப் பயிர் தழைக்கும் காணி என்றும், உலகுக்கு அச்சாணி என்றும் [illegible] மாற்றி எழுதும் எழுத்தாணி என்றும் உருவகம் செய்கிறார். அவற்றில் எதுகை நயமும் இருக்கிறது.

இப்படியே மழையை உப்புக் கடல் நீரை உண்ட மேகம் துப்பிய எச்சிலென்றும், நிலமகளின் மருமத்தில் பாய்ச்சுகின்ற மலர்ச்சரமென்றும்; கொடி மின்னல் கூத்தரசி குதிகாலின் அழுக்கெல்லாம் கடவுளவன் கழுவிவிட்ட நீரென்றும் உருவகிக்கிறார். பனி இந்தக் கவிஞருக்கு இருட்டுத் தேவன் திருட்டு தனமாய்ச் சுருட்டுப் பிடித்த புகையாகிறது; இரவும்

உலகும் உறவு நடத்த இறைவன் போட்ட திரையாகிறது; இயற்கை நங்கையின் மூப்பைக் காட்டும் நரையாகத் தோன்றுகிறது; அந்த மூப்பை மறைக்க அவள் முகத்தில் சோப்பை தடவிய நுரையாகவும் தோன்றுகிறது. மேகம் மலையப்பன் தலைக்கேற்ற முண்டாகத் துண்டாம், மழையைக் கருத்தரிக்கும் நிறை மாதப் பெண்டாம், காற்றடித்து விளையாடும் பந்தாம். இப்படிப் பல உருவகங்கள்.

பூவுக்கு பல உருவகங்கள், புகழிலாதிருக்கும் வாழ்வுக்குப் பல உருவகங்கள்; மௌனத்துக்குப் பல உருவகங்கள் என்று உருவக அடுக்குகள் பலப்பல. ஐம்பொறிகளுக்குத்தான் எத்தனை உருவகங்கள் சொல்லுகிறார்! மெய் (உடம்பு) பெண் ஆண் இருவர் பிசைந்த மண்ணில் எண்சாண் உயரம் எழுப்பிய வீடாம். வாயோ நாவெனும் நாவாய் நீந்திடும் கால்வாயாம்! கண் ஊமை மொழியில் உளங்களுக்கிடையே உலவும் தூதாம்! காது, ஏசும் ஏச்சோ புகழும் பேச்சோ எதையும் தாங்கும் 'இதயம்' மூக்கு, உயிர் அடுப்பெரிய உதவும் விசிறியாகிறது. ஒரு பெண்ணின் காதுக்கு உவமை கூறுகிறார்: 'வலமாய் இடமாய்ச் சுழித் திரண்டு ஒன்பதை வைத்தாற்போலே செவிகள்!'

இப்படிப் பல புதுமையான உருவங்களும் உவமைகளும் தொட்ட தொட்ட இடங்களிலெல்லாம் ஒளிர்கின்றன.

இவர் தம்முடைய தாயைப் பாடுகிறார்; தந்தையைப் பாடுகிறார்; எழுத்தறிவித்த ஆசானைப் பாடுகிறார். அன்னையைப் பற்றிப் பாடுகையில், 'நனைந்தாய் மழையில்; காய்ந்தாய் வெயிலில், நடந்தாய்; குடும்பத் தேரிழுத்தாய்!' என்று இவர்

கூறும் பகுதி நெஞ்சைத் தொடுகிறது. இவருடைய தந்தையோ, 'வாங்கிய புலமை வாரிகக் கீந்து, வந்த கடமை வளமுற முடித்துத் தூங்கிடப் போனான் வைகுந்தத்தில்!' காஞ்சிப் பெரியவர்களைப் பாடுகிறார், 'தத்வார்த்தத் தேன்பிலிற்றும் தாமரையைத் தருமத்தின் நித்ய ஸ்வரூபத்தை நேர் கண்டு நமஸ்கரித்தேன்!' என்னும்போது இவர் உள்ளத்தில் அவர் வடிவம் எவ்வளவு உயர்ந்து நிற்கிறது என்று தெளிவாகத் தெரிகிறது. குல குருவாகிய முக்கூர் வாழ் முனிவரைப் பாடவும் இவர் மறக்கவில்லை.

முடிதிருத்தும் முனியனைப் பாடும்போது அவனுடைய கலையை எவ்வளவுக்கு ரசித்திருக்கிறார் என்று தெரிகிறது. சலவைத் தொழிலாளி சாத்தப்பனைப் பாடுகிறார், 'முனை முறியாப் பச்சரிச் சாதம் போல் வெளுத்து வரும்' அவன், 'நிகரற்றப் பண்பாளனாக நம்முன் நிற்கிறான்!' தொழிலாளியையும் விறகு வெட்டியையும் பாடுகிறார்.

பெண்ணின் எழிலையும் அவள் தரும் இன்பத்தையும் பாடுகிறார். பாரதியாரின் கண்ணன் பாட்டுக்கு முன்னுரை எழுதிய அமரர் வ.வெ.சு. ஐயரவர்கள் 'சிருங்கார ரஸம் என்பது கத்தி முனையின்மேல் நடப்பது போன்றது. பாரதியார் சில இடங்களில் அளவுக்கு மீறிப் போகிறார்' என்ற கருத்துத் தோன்ற ஒரு குறை கூறியிருக்கிறார். அவர் இந்த தொகுதியிலுள்ள பெண்ணெழில் பற்றிய கவிதைகளைப் பார்த்தால் என்ன சொல்வாரோ! காலம் மாறி வருகிறது; சிருங்காரச் சுவை அல்லது இன்பச் சுவையைக் கவிதையில் காட்டுவது என்பது எளிய காரியம் அன்று. இந்தக் காலத்துச் சினிமாக்

காட்சிகளில் அளவுக்கு மீறிக் காம உணர்ச்சி தோன்றுகின்றது. கவிதைகளிலும் அதன் எதிரொலியைப் பார்க்கிறோம். வாலியவர்கள் சினிமாத் துறையில் ஈடுபட்டவராதலின் அந்தப் போக்கு இதிலுள்ள சில கவிதைகளிலும் இருப்பதைத் தவிர்க்க முடியவில்லை போலும்!

அழகிய வருணனைகள், புதுமையான உருவக உவமைகள், தெளிவான நடை, அலுப்புத் தட்டாமல் அல்வாத் துண்டு போன்ற கச்சிதமான அளவில் அமைத்த கருத்துகள் ஆகியவை இவருடைய கவிதைக்குக் கவர்ச்சி தருகின்றன.

ஓசை அங்கங்கே கொஞ்சம் தட்டுவதும், எதுகை மோனை ஆகிய அழகுகளைப் பற்றிச் சில இடங்களில் கவலைப்படாமல் விடுதலை தருவதும், குற்றியலுகரம் கெடாமல் உயிருடன் இருக்கும்படி செய்வதும் போன்ற சிலவற்றை சற்றே கவனத்துடன் நீக்கிவிட்டால் இந்தக் கவிதைகள் நல்ல சாணைபிடித்த வடிவத்துடன் விளங்கும்.

கருத்து வசனமும், எடுத்துரைக்கும் பாணியிற் புதுமையும் உடைய இந்தக் கவிதைகளைத் தமிழ் மக்கள் விரும்பிப் படிப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை!

# சிறப்புரை

பேராசிரியர் நா. பாண்டுரங்கன் M.A.
தமிழ்த் துறைத் தலைவர், புதுக் கல்லூரி,
சென்னை

அழகு நிலவை அல்லி அறியும்.

கவிஞர் வாலியைத் தமிழகம் அறியும்.

இயற்றமிழ்க் கவிஞர்கள் கண் வழியாகச் சென்று மக்கள் இதயத்தில் இடம் பிடிப்பவர்கள்.

இசைத்தமிழ்க் கவிஞர்கள் காது வழியாகச் சென்று மக்கள் இதயத்தில் இடம் பிடிப்பவர்கள்.

இந்நாள் தமிழக மக்கள் இதயத்தில், நிலையான, கலையான, மலையான இடத்தில் இருந்து வருபவர் கவிஞர் வாலி!

இசைத் தமிழ்க்கலைக்கு கவிஞர் வாலி இது வரை ஆற்றியுள்ள பணியின் வெற்றிக்குப் பரிசுகள் இவை :

கவிஞர் வாலிக்கு,

1970ஆம் ஆண்டின் சிறந்த கவிஞருக்கான வெள்ளியாழும், ரூ. 3000மும் தமிழக அரசு வழங்கியது;

1971–72ஆம் ஆண்டில் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் 'கலைமாமணி' விருது வழங்கியது;

1974ஆம் ஆண்டு, திருப்பனந்தாள் பாவலர் மன்றம் புலவர் கீரன் தலைமையில் 'திரைக்கவித் தென்றல்' என்ற விருதை வழங்கியது;

இதுவரை 2500 திரைப்படப் பாடல்கள் எழுதியுள்ள சிறப்புக்கு நான்கு முறை சிறந்த கவிஞர் என்ற விருதை, சினிமா ரசிகர்கள் சங்கம் வழங்கியுள்ளது!

இசைத் தமிழ் வழியே மக்கள் இதயத்தில் உயர் இடம் அடைந்திருக்கும் கவிஞர் வாலி, இப்போது இயற்றமிழ் வழியிலும் அந்த உயர் இடத்தை அடைகிறார்; 'அம்மா' என்று குரல் கொடுத்துத் தமிழ்த் தாயின் இதயத்தில் தங்கச் சிங்காதனம் போட்டமர்ந்து கவிதை பாடத் தொடங்கியுள்ளார்!

தென்னை தரும் இளநீரும், பனஞ் சுளையின் வளநீரும், தாமரையில் வழியும் தேனீரும், பசுவின் மடியிலிருந்து வழியும் பசும்பாலும், தாய்த் தெய்வம் தரும் தாய்ப்பாலாம் தலைப்பாலும், கவிஞர் வாலியின் கவிதைகளில் கலையாய்க் கற்பனையாய்க் கருத்தாய் ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடுகின்றன; ஆற்றுப் பெருக்கெடுத்துப் பாடுகின்றன!

பூவின் உருவங்கள் பல.

மல்லிகையையும், மயக்கும் ரோஜாவும், மனங்கவரும் தாமரையும், ஒவ்வொன்றும் ஒவ்வோர் உருவம் உடையவை; மாறுபட்டவை; அடிப்படையில் ஒன்றுபட்டவை!

பூவும் பாவும் ஒன்றே; பாவின் உருவங்களும் பல; வேறுபட்டவை; மாறுபட்டவை; வளர்ந்த யாப்பினங்கள்; வளரும் யாப்பினங்கள்; எனினும் உருவங்கள் தாங்கும் உள்ளத்தின் அடிப்படை ஒன்றே!

மணம்–மது–மயக்கும் வண்ணம், வடிவம் இவை மலரின் பண்புகள். கருத்து மணம், கலைமது, உணர்வு வண்ணம், யாப்பு வடிவம் இவை நான்கும் கவிதை மலரின் பண்புகள்!

பூவும் பாவும் ஒன்றே!

கடலில் உள்ள மீன்களின் வடிவங்களை எண்ண முடியாது; கவிஞன் படைக்கும் கவிதையின் வடிவங்களையும் எண்ண முடியாது!

கவிஞர் வாலி, கவிதைச் சோலையில் புத்தம் புதிய பூக்களைப் படைக்கும் திறமும் உரமும் பெற்றுள்ளார்!

கலை நலமும் கருத்து வளமும், கடல் எழுச்சி உணர்வின் உளமும், கவிஞர் வாலியின் கவிதைகளில் உடலும் உயிரும் உளமும் கூடிய வாழும் உயிர்களாகக் காட்சியளிக்கின்றன!

அம் என்றால் அழகு; மா என்றால் பெரிது!

அம்மா பெரிது! அழகு பெரிது!

அம்மாவின் அழகு பெரிது!

அம்மாவின் அறிவு பெரிது!

அம்மாவின் அறம் பெரிது!

அம்மாவின் பிறப்புப் பெரிது; சிறப்புப் பெரிது!

கவிஞர் வாலியின் தாய் – தாய்க் கவிதைகட்குத் தாயாய் விளங்குகின்றது.

*"வித்தாய் மடியில் வைத்தாய் மாதம்*
*பத்தாய்ச் சுமந்தெனைப் பெற்றெடுத்தாய்!"*

என்று தொடங்கி, சொல்லெல்லாம் தாயகி அடியெல்லாம் தாயகி நடந்து கவிதை,

*"தனதாய் எதையும் நினைத்தாயில்லை;*
*எனதாய் எண்ணி நீ சேமித்தாய்!*
*சினந்தாயில்லை செய்பிழை பொறுத்தாய்;*
*சிரித்தாய், நீதான் பூமித்தாய்!"*

– என்று தொடர்கிறது!

திருக்குறளின் சிறப்பறிய ஒரு குறளே போதும்; வாலியின் கவிதைச் சிறப்பறிய இத்'தாய்'க் கவிதையே போதும்!

தாயின் எல்லாச் சிறப்பும் வாலியின் இக்கவிதையில் உள; இதன்பால் இல்லாத எச்சிறப்பும் இல்லை!

கற்கண்டு எப்பக்கமும் இனிக்கும்; வாலியின் கவிதைக் கண்டும் அப்படியே!

கவிஞர் வாலியின் 'என் தந்தை' 'எழுத்தறிவித்தவன்' எழுந்து வணங்கும் 'தெய்வம்' எல்லாம் அப்படியே நெஞ்சை நெகிழ வைப்பவை; மகிழ வைப்பவை!

*"எழுத்தறிவிக்கும் ஏழை ஆசான்*
*அழுக்குமனத்தை வெளுக்கும் வண்ணான்"*

அம்மட்டோ! குயவனாக, தோட்டியாக, உழவனாக, கருமானாக, வள்ளல் பெருமானாக, தந்தையாகத் தாயாக, ஏழை ஆசான் பணி புரியும் பாங்கினைக் கவிஞர் அணியில் குழைத்துக் காட்டுகிறார்; அவர்கள் வறுமை நிலைகாட்டி வருந்துகிறார்; வாடுகிறார்!

"ஏடுபுகட்டும் இனத்தவர் தமது
வீடுயராமல் நாடுயராதே!"
— என்கிறார் கவிஞர்.

கவிஞர் வாலி காணும் இயற்கையில் எங்கும் கவிதை பிறக்கிறது. பனியைப் பாடுகிறார் வாலி!

"இருட்டுத் தேவன் திருட்டுத் தனமாய்ச்
சுருட்டுப் பிடித்த புகையோ?
இரவும் உலகும் உறவு நடத்த
இறைவன் போட்ட திரையோ?"

வாலியின் நிலவைப் பாருங்கள்:

"முகிலாம் பட்டுத் துகிலை நீக்கி
முலைப்பா லூட்டும் குடும்பத் தலைவி
அகிலம் அவளது மகவைப் போலே
ஆடியி ருக்கும் பாலைப் பருகி!"

வாலியின் வெயிலில் நடக்கக் குடை வேண்டாம்; கலைத் தென்றல் களிப்பு மலர் மணத்தை அள்ளி வீசுகிறது!

'மன்மத லீலையில்' இன்பத்துப்பால் குடத்தைக் கவிழ்த்து விடுகிறார் கவிஞர் வாலி! இன்பக் குளத்தில் வழுக்கி விழ வைக்கிறார் இதயத்தை!

"உம்பர் குலத் துதித்த
ரம்பை நிகர்த் தவளின்
செம்பொன் வயலை உழவேண்டும் - அவள்
கும்பம் தடவி, இரு
கம்பம் தழுவி அந்த
இன்பக் குளத்தில் விழவேண்டும்!"

'ஞானக் குளியலில்' கவிஞர் வாலியின் கவிதைக் குற்றாலம் அருவி கொட்டுகிறது; அறிவு கொட்டுகிறது!

கவிஞர் தீட்டும் ஐம்பொறிகளில் உருவகத்தேன் சொட்டுகிறது! அவர் தரும் 'திரட்டுப்பால்' எப்பாலும் ஒளிவிடுவது முப்பால் உணர்வு!

கவிஞர் வாலியின் கவிதைகள் தமிழுக்கு ஒரு புதுக் காலம்; கவிதைக்கு ஒரு புதுக்கோலம் !

# என்னுரை

'பொன்னம்மாள் பதிப்பகம்' என்னும் பெயரில் நானே வெளியிட்ட கவிதைத் தொகுப்புதான் 'அம்மா'. என் அன்னையாரின் பெயர்ந்தான் பொன்னம்மாள்.

இதில் உள்ள கவிதைகளெல்லாம், ஐம்பதுகளிலும், அதற்கு முன்னும் பின்னும் புனையப் பெற்றவை. புதுக்கவிதை அவ்வளவாகப் பரிச்சயமாகாத காலம் அது. எனவே மரபு வழிச் சிந்தனைகளிலேயே என்மனம் பயணித்துக் கொண்டிருந்தது.

சினிமாவைத் தாண்டியும் எனக்கென்று சில சிந்தனைகள் உண்டு என்பதை ஊரார்க்கு அறிவிக்கவே, சிதறிக் கிடந்த என் கவிதைகளையெல்லாம் சேகரித்து இந்தத் தொகுப்பை வெளிட்டேன்.

வாகீச காலாநிதி திரு.கி.வா.ஜ. வாழ்த்தியிருக்கிறார். இலக்கண வழுக்கள் இருப்தையும் அவர் சுட்டிக் காட்டியிருக்கிறார். ஆனால், என்னுடைய உவமைகளையும் உருவகங்களையும் அவர், நெஞ்சாரப் புகழ்ந்து என் உச்சி முகர்ந்திருக்கிறார்.

சந்தையில் இந்தப் புத்தகம் கிடைக்காமல் நெடுங்காலமாக என் நண்பர்கள் என்னிடம் வருத்தப்பட்டதுண்டு. மறு பதிவு குறித்து அவரெல்லாம் வலியுறுத்தியதுமுண்டு.

எதற்கும் காலம் கனிய வேண்டுமல்லவா? இப்போது கனிந்திருக்கிறது.

கலைஞன் பதிப்பாகத்தாரின் கைவண்ணத்தில் என் கருத்து வண்ணம் தகத்தகாயமாக ஜொலிக்கிறது என்று சொன்னால் மிகையாகாது.

என் நூல்களை ஒன்று விடாமல் வரிசையாக வெளியிட வேண்டும் – எனக்கு ஓர் இலக்கிய அந்தஸ்தை ஏற்படுத்தித் தர வேண்டும் – என்றெல்லாம் கலைஞன் பதிப்பகத்தார் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இது, இறைவன் திருவருள்.

இந்த நூலில் வெளியாகியுள்ள அனேக கவிதைகள் 'ஆனந்த விகட'னில் வெளி வந்தவை. அப்போது விகடனின் இணையாசிரியராக இருந்த என் இனிய நண்பர் திரு. மணியன் தான், வாராவாரம் என்னிடம் கவிதைகைளை வாங்கி வெளியிட்டு என் சோம்பேறித் தனத்தைத் தகர்த்தவர்.

திரு. மணியனுக்கும் , திரு. மாசிலாமணிக்கும் நன்றியை நெஞ்சாரத் தெரிவித்துக் கொள்கிறேன்.

7.4.95

சென்னை

**வாலி**

என்னை ஈன்ற அன்னை

**பொன்னம்மாள்**

பொன்னடிக்கு

இது

காணிக்கை



‘ரெங்கப்பா’ எனப்பே ரிட்டே
(இ)ராப்பகலா யெனைக் கூப்பிட்டே
உங்கப்பா போலுயர்க வென்றே
உள்ளத்தா சையை வெளியிட்டே
பொங்கும்போ துதாழி யுடைந்தே
போனற்போ லேபுகழில் நான்
தங்கும்நேரம் தலை சாய்த்தாய்
தாயே! உனக்கிது காணிக்கை!

# தாய்

வித்தாய் மடியில் வைத்தாய்; மாதம்
பத்தாய்ச் சுமந்தெனைப் பெற்றெடுத்தாய்!
முத்தாய் முல்லைக் கொத்தாய்க் கொஞ்சி
மொய்த்தாய்; நல்ல பேர்கொடுத்தாய்!
சத்தாய் உணவைச் சமைத்தாய்; பிள்ளை
சமர்த்தாய் உண்ணச் செய்வித்தாய்!
பித்தாய்க் கிடந்து பெரிதாய் அன்பைப்
பெய்தாய்; நீதான் தெய்வத் தாய்!

குழந்தாய்! என்றே அழைத்தாய்; உள்ளங்
குளிந்தாய்; எனைநீ அரவணைத் தாய்!
குழைந்தாய்; பாசம் பொழிந்தாய், தேனில்
குழைத்தாய் சொல்லை நீ மொழிந்தாய்!
விளைந்தாய் மலராய் விரிந்தாய் மணமாய்
விடிந்தாய் எந்தன் பகற் பொழுதாய்!
வழிந்தாய் புனலாய் வளர்த்தாய் பயிரை
வாழ்ந்தாய் எனக்கென நாமுழு தாய்!

நனைந்தாய் மழையில் காய்ந்தாய் வெயிலில்
நடந்தாய்; குடும்பத் தேரிழுத் தாய்!
முனைந்தாய் பணியில் சலித்தாயில்லை;
துணிந்தாய் எதற்கும் தோள் கொடுத்தாய்!

கவிஞர் வாலி

தனதாய் எதையும் நினைத்தாயில்லை;
எனதாய் எண்ணி நீ சேமித்தாய்!
சினந்தாயில்லை செய்பிழை பொறுத்தாய்;
சிரித்தாய், நீதான் பூமித்தாய்!

மருந்தாய் நோயில் விருந்தாய்ப் பசியில்
இருந்தாய்; நீயெனை வாழ்வித்தாய்!
மறந்தாய் உன்னை; நினைந்தாய் என்னை
அருந்தாய்ப் பண்பை அறிவித் தாய்!
வருந்தாய் நாளும் மெலிந்தாய் மேனி
உழைத்தாய் இரவில் துயில் நீத்தாய்!
புரிந்தாய் வினைகள் முடித்தாய் கடனை;
படுத்தாய்; ஒருநாள் உயிர் நீத்தாய்!

மறைந்தாய் மண்ணில் மடிந்தாய் எனினும்
நிறைந்தாய் நெஞ்சில் நீ நிலைத்தாய்!
பிரிந்தாய் விண்ணில் பறந்தாய் எனினும்
படிந்தாய் கண்ணில் நீர்முத் தாய்!
இறந்தால் நானும் பிறந்தால் மீண்டும்
இடந்தா! உந்தன் மடி மேலே!
இருந்தால் உந்தன் மகனா யிருக்கும்
வரந்தான் வேண்டும் புவிமேலே!

# தந்தை

பொய்யா நெஞ்சம்; புரளா நாக்கு;
புரிநூல் தவழுந் திருமார் பழகு!
வைதிக வடிவம்; பஞ்சக் கச்சம்;
வடகலைத் திருமண்; வேதாத் தியயனம்!
உய்யும் வகைக்குத் தெய்வப் பற்று;
ஒன்றா யித்தனை உயர்வும் பெற்று
மெய்யா யொழுகி வேதியர் குலத்தை
மேம்பட வைத்த மன்னனென் தந்தை!

தேன்கனித் தமிழில் திவ்வியப் பிரபந்தம்;
தேவநா கரியில் தத்துவப் பாடம்;
ஆங்கில மொழியில் உலகியல் ஞானம்
அனைத்தும் பயின்று அறிவைக் கொண்டு
வாங்கிய புலமை வாரிசுக் கீந்து
வந்த கடமை வளமுற முடித்து
தூங்கிடப் போனான் வைகுந் தத்தில்;
தூயவன் திருவடி துதித்திடு மனமே!

# எழுத்தறிவித்தவன்

எழுத்தறி விக்கும் ஏழை ஆசான்
அழுக்கு மனத்தை வெளுக்கும் வண்ணான்;
எண்ணம் என்னும் மண்ணை பிசைந்து
வண்ணப் பாண்டம் வனையுங் குயவன்;
குப்பை மதியைக் கூட்டிப் பெருக்கி
துப்புர வாக்கிக் காட்டுந் தோட்டி!
கொத்திக் கிளறிப் புத்தியில் நல்ல
வித்தை எடுத்து விதைக்கும் உழவன்!

வளையா நெஞ்சை வகுப்பறை யென்னும்
உலையி லடித்து வளைக்குங் கருமான்;
உள்ள வரைக்கும் கல்விச் செல்வம்
அள்ளி யிறைக்கும் வள்ளல் பெருமான்;
ஊரார் பெற்ற பிள்ளைக ளன்பைப்
பேராதர வாய்ப் பேணுந் தந்தை;
ஊட்டம் மிகுந்த ஞானப் பாலை
ஏட்டின் வழியே ஊட்டும் அன்னை!

அறிவு கொளுத்தும் ஆசான் பெருமை
விரிவு படுத்தி உரைக்கின் வளரும்;
ஆயினும் என்ன? ஆசிரியர்கள்
நாயினுங் கேடாய் நலிந்தா ரன்றி,
போதிய வகையில் பொருளா தாரம்
ஊதியம் உண்டி உறையுள் வசதி
எல்லாங் கண்டா ரென்பதற் கில்லை;
இல்லா மைக்கே இலக்கண மானார்!

விளங்கிட மனைதான் வெளிச் சமடிக்கும்
விளக்கடி யில்தான் இருட்டு மிருக்கும்!
வாழ்வு கொடுக்கும் கல்வி படைப்போர்
தாழ்வு நிலைக்கது உவமை போலும்!
ஆர்தா னிவையின் காரண மாமென
ஆராய் வதனா லாவதொன் றில்லை;
ஏடு புகட்டும் இனத்தவர் தமது
வீடுய ராமல் நாடுய ராதே!

# கணபதி வணக்கம்

அரசமரத் தடியரசன்;
ஆனைமுகத் தாணழகன்;
முரசறையும் நான்மறையின்
முழுப்பொருளாய் முளைத்தமகன்;
புரிசடையோன் முதற்பிள்ளை;
பூந்தமிழில் நான்பாட
வருசமயம் என்றனுக்கு
வழித்துணையாய் வந்துதிப்பன்!

# முருகன் துணை

வேலினை ஏற்ற வேந்தன்;
விருத்தனாய் நின்ற காலை
கோலினை ஏற்ற குமரன்;
குறமகள் வள்ளி யம்மை
மாலினை ஏற்ற மன்னன்;
மதிவளஞ் சாற்றி டாதென்
நூலையும் ஏற்றி ருப்பன்
நுவலருந் தயையி னாலே!

# நாமகள் போற்றி

பங்கயப் பூவிலும்
பாப்புனை நாவிலும்
தங்கியே யாழதன்
தந்தியைத் தடவியே
பொங்கிடும் நல்லிசை
பொழிபவள் ஏழையென்
பங்கிலும் நின்றருள்
பயந்தனள் பரிவினால்!

# திருமகள் துதி

வலமார்பில் வைத்தபடி
வணங்கிவரும் திருமாலின்
குலமாது; பெருஞ்செல்வம்
குவிக்கின்ற திருமடந்தை;
மலரடியைத் தொழுதேற்றும்
மனமுடையோ ரெந்நாளும்
நலமுடையோ ரென்பதற்கு
நானுமொரு நற்சாட்சி!

# பாதத் தாமரை

நாக்காடு பலபொய்கள் நமைவிட்டுப் போக
நோக்காடு தீர்ந்துள்ளம் நலமென்ப தாக
தீக்காடு போல்பற்றுந் தீமைக ளழிய
வேக்காடு போல்வாட்டும் வினைமுற்று மொழிய
சாக்காடு போற்சூழும் சாபங்கள் தொலைய
பூக்காடு போலின்பம் பொழுதோடு விளைய
வேற்காடு தனைமேவி வாழ்கின்ற தேவி
வெண்டா மரைப்பாதம் வண்டாக மொய்ப்பீர்!

அருள்வெள்ளம் வற்றாமல் அளக்கின்ற கேணி;
மருள்கின்ற மடநெஞ்சை மேலேற்று மேணி;
கருமத்தின் கடல்தாண்டிக் கரையேற்றுந் தோணி;
தருமத்தின் பயிர்நாளுந் தழைக்கின்ற காணி;
உருள்கின்ற உலகுக்கு உதவுமச் சாணி;
வருவோர்தம் வினைமாற்றி யெழுதுமெழுத் தாணி;
கருமாரி; மகமாயி; பரமகல் யாணி
கமலப் பொற்பாதத்தி லமரும் வண்டாவீர்!

சர்ப்பத்தில் துயில்கின்ற சாரங்கன் தங்கை;
சர்ப்பத்தை யணிகின்ற சங்கரன் துணைவி;
சர்ப்பஸ்வ ரூபமாய் சமைந்த கௌமாரி;
சர்வத்தி லுந்தோன்றும் சூலி; ஓங்காரி;
சர்வாலங் காரமாய் நிற்குமெழில் நீலி;
சர்வநல மருள்கின்ற சௌபாக்கிய வல்லி;
சர்வேஸ்வரி ; அன்னை சக்தி கருமாரி
சரணாம் புஜந்தன்னில் முரலும் வண்டாவீர்!

# நற்றமிழே என்குற்றந் தவிர்க்க!

உயிரும் மெய்யும் உன்னிடம் உண்டு,
உன்னைப் போலவை என்னிடம் உண்டு!
கைகா லோசை உன்னிடம் உண்டு;
கண்டிப் பாயவை என்னிடம் உண்டு!
அகமும் புறமும் உன்னிடம் உண்டு;
அஃதே போலவை என்னிடம் உண்டு!
அகண்ட ஞானம் உன்னிடம் உண்டு;
அதுதான் தாயே! என்னிடம் இல்லை!

இல்லா ததற்கு எளியே னுன்னைக்
கல்லா ததுதான் காரண மாகும்;
கல்லா ததற்குக் கற்றோர் பின்னே
செல்லா ததுதான் காரண மாகும்!
எல்லாக் குற்றமு மென்னிட மிருந்தும்
ஏழை உன்பா லென்றோ வைத்த
நல்லா சையினால் பாடத் துணிந்தேன்;
நற்றமிழே என் குற்றந் தவிர்க்கவே!

# மழை

உப்புக் கடல்நீரை
உறிஞ்சியதால் வான்மேகம்
உடன்விழுங்க வொண்ணாமல்
உள்தொண்டை கரித்ததனால்
துப்பிய எச்சில்தான்
தூயபெரு நிலமெங்கும்
தூறலெனச் சாரலெனத்
துளித்துளியாய்த் தெளித்ததுவோ?

உருவற்ற மாரன்போல்
உலவுகின்ற வான்மகன்தான்
பருவத்தே பயிர்செய்யப்
பார்த்திருக்கும் நிலமகளின்
சருமத்தில் கொதிப்பேற்றிச்
சம்போக நினைவேற்ற
மருமத்தில் பாய்ச்சுகின்ற
மலர்ச்சரமே மழைச்சரமோ?

இடியோசை தாளமிட
இடுப்பொடிய ஆடிவரும்
கொடிமின்னல் கூத்தரசி
குதிகாலின் அழுக்கெல்லாம்
படிந்ததனால் வான்வெளியைப்
'பளிச்' சென்று பழையபடி
கடவுளவன் கழுவிவிட்ட
கழிநீர்தான் மழைநீரோ?

# பனி

இருட்டுத் தேவன் திருட்டுத் தனமாய்ச்
சுருட்டுப் பிடித்த புகையோ?
இரவும் உலகும் உறவு நடத்த
இறைவன் போட்ட திரையோ?

நாட்பட வாழும் நங்கை இயற்கை
மூப்பைக் காட்டும் நரையோ?
மூப்பை மறைக்க முகத்தில் அவள்தான்
சோப்பை தடவிய நுரையோ?

நாயகன் சூரியன் மாய்ந்தத னால்புவி
நாயகி கட்டிய துணியோ?
ஆயிரங் கற்பனை தோய்ந்திட வேவந்து
வாய்த்தது தானிந்தப் பனியோ?

# நிலவு

இருட்டுச் சுவரில் வெள்ளை யடிக்க
இறைவ னமர்த்திய வேலைக்காரி!
ஒருநாள் மட்டும் மாதவிடா யால்
வேலைக்கு வராத வாலைக்குமரி!

தூது நடத்திக் காதல ரிடையே
சேதி யுரைக்குந் தாதிக்கிழவி!
மாது மனத்தில் சூடு கிளப்பி
மெத்தைக் கனுப்பும் வித்தைக்காரி!

முகிலாம் பட்டுத் துகிலை நீக்கி
முலைப்பா லூட்டும் குடும்பத்தலைவி!
அகிலம் அவளது மகவைப் போலே
ஆடியிருக்கும் பாலை பருகி!

# வெயில்

வாவியில் தாமரைப் பூவிதழை, ஒளி
தூவி யெழுப்பி மலர்த்துகிறாய்! நெடு
நேரம் பனியில் நனைந்த உலகை
ஈரம் போக உலர்த்துகிறாய்!

மேலைத் திசையை ஈற்றடி யாக்கிக்
காலையில் வெண்பா தொடங்குகிறாய்! அதில்
வெளிச்சம் என்றொரு விழுமிய பொருளைப்
பளிச்செனக் காட்டி முழுங்குகிறாய்!

குழந்தைப் பருவம் கொண்டவ ரெல்லாம்
குளுமைச் சிரிப்பைக் காட்டிடுவார்! நீயும்
இளவெயி லாக இருக்கையி லேயென்
குளிருக் கிதமாய்த் தோற்றுகிறாய்!

பிள்ளை வளர்ந்து பெரியவ னானால்
சள்ளை; சண்டை; சச்சரவு! நீயும்
மெல்ல வளர்ந்தால் வெம்மை; வியர்வை;
சொல்ல வொண்ணாத தொந்திரவு!

கீழ்நிலை விட்டு மேல்நிலை வந்தோர்
சூழ்நிலை யாலே மாறிடுவார்! நீயும்
நடுவான் தொட்டு நிமிர்ந்தது மேனோ
சுடுகன லாக மாறுகிறாய்!

இல்லா தவரை எளியோரை, மனம்
இல்லா தவரே வதைக்கின்றார்! நீயும்
செருப்பில் லாதோர் சேவடி தன்னில்
நெருப்பைப் போலே கொதிக்கின்றாய்!

மாசுடையோர் கைக் காசுடையோ ரெனில்
வீசும் விசிறிகள் ஏராளம்! நீயும்
கைக்குடை காலணி கொண்டோரை வதை
செய்வது மில்லை எந்நாளும்!

உச்சி வரைக்கும் உயர்ந்தவன் கூடப்
பச்சை ஓலையில் சாய்கின்றான்! நீயும்
அந்திம காலம் வந்தவன் போலே
அந்திப் போதில் மாய்கின்றாய்!

வெயிலே உன்னை விளக்கியதால், சிறு
பயலே என்றெனை எள்ளாதே! உன்
அருளில் லாவிடில் ஒளியே இல்லை;
இருளில் என்னைத் தள்ளாதே!

# கோவளம் கடற்கரை

நுரை திரித்துத் திரையெழும்பிக்
கரை யலம்பும்;
நுணற் கூட்டம் மணற்மேட்டில்
நின்று லாத்தும்!
இரை வேண்டிப் பறவையினம்
இரைச்சல் போடும்;
ஏய்ப்பது போல் மீன்குழாந்தான்
பாய்ச்சல் காட்டும்!

கெண்டை யொன்றைக் கொத்திப்போய்
கொக்குத் தின்னும்;
கூர லகில் மீனெலும்பு
சிக்கிக் கொள்ளும்!
தொண்டை யிலே விக்கல்வரத்
துப்பிச் செல்லும்;
துப்பியதை நாய் பார்த்துத்
தூக்கிச் செல்லும்!

கடல் மிதந்த நாவாய்கள்
காற்று வாங்கும்;
காய வைத்தே மீன்வலைக்குள்
ஈயு றங்கும்!
இடம் பெயர்ந்து பால்நண்டு
நடை பயிற்றும்;
ஈச்ச மர நிழல்வரைக்கும்
போய்த் திரும்பும்!

உப்பளத்தில் மெத்தை யிட்டு
உறங்குங் காற்று
உடம் பரிப்புத் தாளாமல்
விழிப்புக் கொள்ளும்;
முட்படர்ந்த கத்தாழை
மடலைக் கண்டு
முது கரிப்புக் கிதமாகச்
சொறியச் சொல்லும்!

வெய்யோனும் மேற்றிசையில்
வீழ்ந்து சாவான்;
விழிசிவக்க அடிவானம்
அழுது தீர்க்கும்!
மையிருட்டைக் கறுப்புடையாய்
வையஞ் சூடும்;
மயலொழுக இரங்கற்பா
இயற்றிப் பாடும்!

கடலலைகள் புவிப்பெண்ணைத்
துக்கங் கேட்கும்;
கரையோர நாடகத்தை
நிறுத்தி வைக்கும்!
மடலவிழ்ந்த மலர்போலே
மதியம் தோன்றும்;
மறுபடியும் கடற்கரையில்
மகிழ்ச்சி பூக்கும்!

# மேகம்

மலையப்பன் தலைக்கேற்ற
முண்டாசுத் துண்டு;
மழையைக் கருத்தரிக்கும்
நிறைமாதப் பெண்டு!
அலையுங் காற்றடித்து
விளையாடும் பந்து;
ஆழ்கடல் நீர்தன்னை
அள்ளிவரும் செம்பு!

வானமெனுந் தாழியிலே
வழிந்துருகு வெண்ணெய்;
வெண்ணிலவுஞ் சிலநேரம்
ஒய்வெடுக்குந் திண்ணை!
மோனவெளிச் சாகரத்தில்
முளைத்தெழுந்த தீவு;
முகங்காட்டுஞ் சூரியனை
மூடிவைக்குங் கதவு!

நீர்காய உலர்த்திவைத்த
நீலநிறச் சேலை;
நிலமகளின் வாய்நிறைய
நீர்வார்க்கும் பானை!
ஊர்ந்தபடி ஆகாயக்
குளம்நீந்தும் ஓடம்;
உவமைகள் நானுரைக்க
உதவுகின்ற மேகம்!

**கவிஞர் வாலி**



வண்டுக ளுக்கோர் விபச்சார விடுதி
வாடைக் காற்றின் காதற் கிழத்தி!

வெண்பனித் துளியின் கண்கவர் படுக்கை!
வசந்த காலத்தின் விளம்பர பலகை!

ஈக்கள் கள்ளை இறக்கிடுந் தென்னை!
இனிய மணத்தின் விளைவுப் பண்ணை!

மூக்குடை யோரை ஈர்க்குங் காந்தம்!
முட்களி னிடையே உட்கார்ந்த பாண்டம்!

பொங்குந் தேன்துளி தங்கிடுந் தாழி!
பூவின் வாழ்வோ ஓர்சில நாழி!

மங்கலங் கொஞ்சும் மணிவிழிக் குமரி
மொய்குழல் பூவின் வைகுந்தப் பதவி!

# மின்னல்

கார்முகிலின் கையெழுத்து;
கக்கிருட்டுப் புற்றிடையே
ஊர்ந்தோடும் ஒளிப்பாம்பு;
உலகத்து நடப்பனைத்தும்
ஒருநொடியில் புலப்படுத்தி
உடனே சாகும் வெளிச்சம்;
ஆர்த்தெழுந்து இடியரக்கன்
அகிலத்தை அடிக்குஞ்சாட்டை!

# என்னைப்போல் யோக்கியனில்லை

ஆடை அணிகலனால்
அங்கத்தில் புடைத்திருக்கும்
மேடை மறைத்துப் பின்
மெத்தையிலே வெளிக்காட்டும்
பேடைக் குயில்களாம்
பெண்குலத்தார் பூங்குழலின்
வாடைபடா இடத்தில்
வாழ்ந்திருந்தால் யோக்கியன் நான்!

பைய நடை பயின்று
பாகு மொழி பேசி
செய்ய தாமரை போல்
சிரித்த முகங் காட்டி
சையோகம் பயிலஎனை
சயன அறைக் கழைக்குந்
தையலா ரிலா இடத்தில்
தனித்திருந்தால் யோக்கியன் தான்!

புத்தகம் போல்தனைப்
புரட்டுவோர்க் கிதழ்களால்
ஒத்தடம் கொடுத்தவர்
உளமெனும் நிலத்தினைக்
குத்தகை எடுக்கின்ற
கோதையர் கை வளைச்
சத்தமே இலா இடத்தைச்
சார்ந்திருந்தால் யோக்கியன் நான்!

கவிஞர் வாலி

நுங்குநிற மேனி
நூலிடையின் மேலிரண்டு
தெங்கு முளைத்திருக்கத்
தேடுஞ் சுகமனைத்தும்
இங்குதா னுள்ளதென
ஈர்க்கின்ற ஏந்திழைகள்
பங்குபெறா இடத்தில்
படுத்திருந்தால் யோக்கியன் நான்!

ஓரவிழி யாலே
உள்ளத்தை அழுக்காக்கி
ஈர இதழ் கொண்டு
என்னுடலைக் குளிப்பாட்டி
ஆரத் தழுவ விட்டு
ஆடையினை நழுவவிடும்
ஆரணங் கிலாஇடத்தில்
அமர்ந்திருந்தால் யோக்கியன் நான்!

கிண்ணத்தில் மதுவூற்றிக்
கிறுகிறுக்க வைத் தென்றன்
எண்ணத்தில் வெறியேற்றி
இதயத்தைக் கொதிப்பாக்கி
உண்ணக் கனிகொடுத்து
உடற்பசியைத் தீர்க்கின்ற
பெண்ணினம் இலாஇடமாய்ப்
போயிருந்தால் யோக்கியன் நான்!

# மாது

நூல்கொண் டளக்கும் இடை! – இள
நெஞ்சைத் தகர்க்கும் படை! – காமப்
பால்கொண் டளக்கும் விழி! – நம்
பாதந் தடுக்குங் குழி! – இடை
மேல்கொண் டிருக்குஞ் சுமை! – ஒரு
மயக்கில் அழுத்தும் நமை! – மாது,
கால்கொண் டிருக்கும் மது! – அதில்
கிறங்கா மனந்தா னெது?

பொய்கொண் டளக்கும் மொழி! – புதுப்
பாடம் புகட்டும் வழி! – நறு
நெய்கொண் டளக்குங் குழல்! – நம்
நினைவை முழுக்குஞ் சுழல்! – தேன்
மொய்த்துக் கிடக்கும் இதழ்! – நமை
மூடிக் கிடத்தும் அகழ்! – மங்கை
கைகொண் டணைக்கும் மலர்! – அதில்
கனியா திருப்போ ரெவர்?

# பக்க வாத்தியம்

இச்சைக் கிளியொ ருத்தி
எச்சிற் படுத்தி மது
மிச்சம் எனக்கத் தரவேண்டும் ! – இளம்
பச்சை நரம்பி லிரு
மொச்சை முளைத்த முலைக்
கச்சை அவிழ்த்து வரவேண்டும்!

கல்லால் வடித்த தனம்
பல்லால் கடித்து ஒரு
வில்லா யிழுத்து விடவேண்டும் ! – அவன்
மல்லாந் திருக்கும் விதம்
புல்லால் மறைத்த நிலம்
எல்லாம் விழியில் படவேண்டும்!

உம்பர் குலத்து தித்த
ரம்பை நிகர்த்த வளின்
செம்பொன் வயலை உழவேண்டும்! – அவள்
கும்பம் தடவி, இரு
கம்பம் தழுவி அந்த
இன்பக் குளத்தில் விழவேண்டும் !

காயும் நில வெரிந்து
ஓயும் வரையில், இரு
வாயும் சுவைத் தொழுகவேண்டும்! அவள்
காயம் முழுதும் நகக்
காயம் பதியும் விதம்
மாயக் குறிப் பெழுதவேண்டும்!

# கள்ளும் பெண்ணும்

கன்னங்கள் வழி
தென்னங்கள் தரும்
அன்னங்கள் தான்
பெண்கள்! – தங்கள்
தனங்கள் வழி
பனங்கள் தரும்
இனங்கள் தானே பெண்கள்!

முத்தங்கள் வழி
நித்தங்கள் தரும்
தத்தைகள் தான்
பெண்கள்! – கொவ்வைப்
பழங்கள் வழி
பழங்கள் தரும்
குலங்கள் தானே பெண்கள்!

அங்கங்கள் வழி
பொங்குங்கள் தரும்
தங்கங்கள் தான்
பெண்கள்! – வாழைத்
தொடைகள் வழி
சுவைகள் தரும்
கடைகள் தானே பெண்கள்!

கவிஞர் வாலி

# பிரிவறியாள்

சேல்விளை யாடிடு நீர்நிலை போலவள்
மேல்விளை யாடிடும் போது – ஏர்க்
கால்விளை யாடிடு நீள்வயல் போலுடல்
கனிந்திடு வாளிள மாது!

நூல்விளை யாடிடு தறியினைப் போலவள்
மேல்விளை யாடிடும் போது – கூர்
வேல்விளை யாடிடு போர்க்களம் போலுடல்
விளங்கிடு வாளிள மாது!

மால்விளை யாடிடு மாலிலை போலவள்
மேல்விளை யாடிடும் போது– நிறை
சூல்கொண்ட முகில்நிகர் சுருள் குழலாலெனை
மூடிடு வாளிள மாது!

பால்கொதித் தாடிடு பாத்திரம் போலவள்
மேல்குதித் தாடிடும் போது – தன்
பால்கொண்ட நால்வகைக் குணங்களை மெல்லப்
பகைத்திடு வாளிள மாது!

கோலுற வாடிடுங் கொடியினைப் போலவள்
மேலுற வாடிடும் போது – ஒரு
நாள்பிரிந் தாலுயிர் நான் பிரிவேனெனச்
சூளுரைப் பாளிள மாது!

# அவளுக்கென்ன

வெள்ளைத் தாளில் இரண்டு திவலை
விழுந்த மைத்துளி போலே விழிகள்;
வலமா யிடமாய்ச் சுழித் திரண்டு
ஒன்பதை வைத்தாற் போலே செவிகள்!
உள்ளே வீட்டின் ஓரம் மடக்கி
வைத்த குடையைப் போலே நாசி;
வட்டம் ஒன்றைச் சரியாய்ப் பாதி
வெட்டி யொட்டினாற் போலே புருவம்!

ஆரஞ்சுப் பழச் சுளைக ளிரண்டை
அடுக்கி வைத்தாற் போலே யிதழ்கள்;
ஆனையின் தந்தத் தாலே கடைந்து
ஆக்கிய சிப்பைப் போலே பற்கள்!
ஆரத்தி நீரைக் கரைத்துச் சிவந்த
அம்பொற் தட்டைப் போலே கன்னம்;
அளவைக் குதவும் அரைகாற் படிபோல்
அளவாய் நீண்டு அமைந்த கழுத்து!

தூணிரண் டிலே ஆமணக் கெண்ணையைத்
தேய்த்து விட்டாற் போலே தொடைகள்;
தண்ணென் றிருக்குந் தெள்ளிய புனலின்
தண்ணீர்ச் சுழியைப் போலே தொப்புள்!
ஆணிய டித்ததோ ரழகிய பம்பரம்
அண்ணாந் தாற்போல் மார்பின் வடிவம்;
ஆழிக் கரையில் புரட்டிப் போட்ட
சோழியைப் போலே கருப்பக் கிருகம்!

கவிஞர் வாலி

# போய்வா, தோழி

போய்வா! தோழி! வருவதாய்ச் சொல்லிப்
போனவ னின்னும் வரவில்லையே! ஓர்
வாய் வார்த்தை நீ கேட்டுவா; பின்னும்
வாரா திருந்தால் வழக்கினை முடிப்போம்!
காய்வா னிலவும் நோய்வாய்ப் படுத்த
காதற் கிழத்தி வாதைப் படுகையில்
ஒய்வா யவனும் உட்கார்ந் திருக்கும்
உட்கருத்தை நீ தட்டிக் கேளடி!

கொங்கைக் காம்புகள் கச்சைக் கிழித்தன
கொய்வா ரின்றிப் போனத னாலே!
செங்கை வளைகள் கழன்று விழுந்தன
சேர்வ ரின்றிச் சூம்பிய தாலே!
புங்கை மரத்து நிழலில் என்னைப்
புணர்ந்து இன்பம் பகிர்ந்தவ னெனது
பங்கை இன்னமும் பாக்கி வைத்தானே;
பாங்கி! எனக்கதை வாங்கிவா! போடி!

ஈரம் நிறைந்தமென் மலரில் கொதிப்பு
ஏறிக் கிடப்பதை எடுத்துரை யாயோ?
சாரம் நிறைந்தயென் செவ்வா யதரம்
சாயம் வெளுத்ததைச் சொல்லவொண் ணாயோ?
கூரம் பெய்கிறான் காமனென் மர்மக்
குறியினில் என்னுங் குறிப்புணர்த் தாயோ?
பேரம் என்னிடம் பேசுவ தென்னடி?
போய்வா! உனக்குப் புண்ணியங் கோடி!

# அங்காடி

மீன்வியா பாரங் கண்செயும்! நறுந்
தேன்வியா பாரஞ் சொல்செயும்!
ஊன்வியா பாரம் உடல்செயும்! அந்த
சிங்காரி ஓர் அங்காடி!

கள்வியா பாரம் இதழ்செயும்! பழங்
கள்வியா பாரம் மார்செயும்!
நள்ளிர வில்தான் கடையுண்டு! பகல்
நேரம் வந்தால் தடையுண்டு!

சரசம் தான்விலை உள்ளபடி! சில
சமயம் நாணம் தள்ளுபடி!
விரசம் பார்த்தால் பேரமிலை! இந்த
வியாபா ரத்தில் சாரமிலை!

முத்தம் மட்டும் கடனுண்டு! – வட்டி
மூன்று மடங்கு உடனுண்டு!
சத்தம் மட்டும் கூடாது ! – கடை
சார்த்தப் படுமது வரும்போது!

நித்தமு மிந்த வியாபாரம்! – கடை
மொத்தமு மெனக்கே விலையாகும்!
மற்றவர்க் கிந்தக் கடையில்லை! – இதன்
மர்மம் கேட்டால் விடையில்லை!

# குழந்தை

காதல் தேவன் தலைமையிலே
கட்டில் என்னும் அரங்கேறி
மோதும் இளமைத் துடிப்போடு
மோகம் என்னும் பொருள்பற்றிக்
காமஉ ணர்வுகள் கைதட்ட
காரிருள் வந்து பாராட்ட
ஊமை மொழியின் உதவியுடன்
ஊனும் உயிரும் உருகிடவே

ஏக்கம் என்பது எதுகையென
ஏனைய நினைவுகள் மோனையெனப்
பூக்கும் சுகத்தில் கற்பனைகள்
புதுப்புது விதமா யுருவாகக்
கன்னியி னுடலை ஏடெனவே
காளை யொருத்தன் கையாண்டு
பின்னி முடித்த பூங்கவிதை
பிறந்து வந்த சிறுகுழந்தை!

# காதல்

கூப்பிட்டா மலர் தேடி
வண்டு வரும்? – தேதி
குறிப்பிட்டா கொய்யாவைக்
கிளிகள் கொத்தும் ?
சாப்பிட்டால் வருகின்ற
ஏப்பம் போலே – கண்கள்
சந்தித்தால் வரவேண்டும்
உண்மைக் காதல்!

பாலுணர்வு பெரிதல்ல
காதலுக்கு! – உணர்ச்சிப்
பரிமாற்றம் பொருளல்ல
காதலுக்கு!
தோலுறவு பொருட்டல்ல
காதலுக்கு!– நெஞ்சத்
தொடர்பொன்றே மூச்சாகும்
காதலுக்கு!

கல்யாணக் கட்டடத்தைக்
கட்டுதற்கு – நான்கு
கண்கலந்து நடத்துகின்ற
கால்கோள் விழா!

இல்வாழ்வுக் காவியத்தை
இயற்றுதற்கு – முதலில்
இருநெஞ்சம் எழுதிவைக்கும்
காப்புச் செய்யுள்!

நிரையசையில் வருகின்ற
இணைக்குறிலாய் – என்றும்
நெஞ்சிரண்டும் இணைபிரியா
நிலையே காதல்! – நேரில்,
குறிலெடுத்து வருகின்ற
ஒற்றெழுத்தாய் – அன்பின்
குறிக்கோளை ஒட்டிவரும்
உணர்வே காதல்!

கடல்கொண்ட நுரைபோலே
முடி வெளுத்தும் – பசுங்
கதிர்முற்றிப் போனதுபோல்
முதுமை வந்தும்
உடல்கொண்ட இச்சைகள்
ஓய்வெடுத்தும் – நல்ல
உள்ளத்தே உயிர்த்திருக்கும்
உண்மைக் காதல் !

# ஞானம்

நக்கிநக்கி நரகலை
நாவினிக்கத் தின்னுகின்ற
குக்கலுக்கும் ஞானம் வரக்கூடும் – இனி
நக்குவதே இல்லையென்று கூறும்! – அதன்
பக்கமொரு எச்சிலிலை
பந்திவிட்டு வந்துவிழ
வெட்கம் விட்டு நக்கித்தின்ன ஓடும் – அந்த
வேளையிலே ஞானம் விடை கூறும் !

குக்குடம்தன் கூவலினால்
கீழ்த்திசையில் செங்கதிராம்
பொற்குடம் திறந்ததெனத் துள்ளும் ! – வாய்
பொத்தியினி நிற்பதாகச் சொல்லும் ! – வான்
செக்கரென வண்ணமுற
செங்கதிரோன் வந்துவிட்டால்
வெட்கம் விட்டு வாய்வலிக்கக் கூவும்! – அந்த
வேளையிலே ஞானம் வந்து மேவும்!

குக்கலைப்போல் பலபேரும்
குக்குடம்போல் சிலபேரும்
மிக்கவுண்டு மாநிலத்தில் பாரும் ! – இந்த
மக்களுக்கு ஞானமெது கூறும்? – மனப்
பக்குவ மடைந்தவர்க்கும்
பற்றறுத்த பேர்களுக்கும்
தக்கபடி உதிப்பதுதான் ஞானம்! –வெறுந்
தர்க்கங்களைப் புரிவதுதான் ஈனம்!

கவிஞர் வாலி

# அழுகின்றான்

பாலுக் கழுவான் பிள்ளையிலே! – பின்
நூலுக் கழுவான் பள்ளியிலே!
மாலுக் கழுவான் இளமையிலே! – இந்த
மனிதன் எதற்கும் அழுகின்றன்!

கூலிக்கழுவான் வேலையிலே! – பின்
கூழுக் கழுவான் வறுமையிலே!
போலிக் கழுவான் மேடையிலே! – இந்த
மனிதன் எதற்கும் அழுகின்றன்!

பெண்டுக் கழுவான் பள்ளியிட! – ஒரு
பிள்ளைக் கழுவான் கொள்ளியிட!
இரண்டுக் கழுவான் ஒன்றிருந்தால்! – இந்த
மனிதன் எதற்கும் அழுகின்றன்!

உறவுக் கழுவான் துறவினிலே! – பின்
துறவுக் கழுவான் உறவினிலே!
வரவுக் கழுவான் செலவினிலே! – இந்த
மனிதன் எதற்கும் அழுகின்றன்

கருவறையில் இவன் அழுதான்ா? – இல்லை
கல்லறையில் தான் அழுதானா?
வருவதை யெண்ணியும் அழுகின்றான்! – இவன்
வந்ததை யெண்ணியும் அழுகின்றான்!

எத்தால் இவனைத் தேற்றுவது? – அட
எவர்தான் இவனை மாற்றுவது? – இவன்
செத்தால் அழுகை நிற்கிறது! – உடன்
மற்றவர் அழுகை கேட்கிறது!

# புகழிலாதிருக்கும் வாழ்வு

நாக்கிலா திருக்கும் மணி;
நரம்பிலா திருக்கும் வீணை!
நதியிலா திருக்கும் ஊர்;
நடவிலா திருக்கும் வயல்!
மூக்கிலா திருக்கும் கெண்டி;
முடைந்திடா திருக்கும் கீற்று!
முகிழ்த்திடா திருக்கும் மொட்டு ;
புகழிலா திருக்கும் வாழ்வு!

காலிலா திருக்குங் கட்டில்;
கழுத்திலா திருக்குங் கூஜா!
கையிலா திருக்குஞ் சட்டை;
காதிலா திருக்குந் தோடு!
வாலிலா திருக்கும் பட்டம்;
விழியிலா திருக்குஞ் சிற்பம்!
வகிடிலா திருக்கும் கேசம்
புகழிலா திருக்கும் வாழ்வு!

நெருப்பிலா திருக்கும் வத்தி;
நெய்திடா திருக்கும் பஞ்சு!
நீரிலா திருக்கும் மேகம்;
நீந்திடா திருக்கும் ஓடம்!
துருப்பிலா திருக்கும் நாடு;
துளையிலா திருக்கும் ஊசி!
தொகையிலா திருக்கும் பெட்டி,
புகழிலா திருக்கும் வாழ்வு!

# மௌனம்

கதவடைத் தேதன் கோரிக்கை காக
உதடுகள் நடத்தும் வேலை நிறுத்தம்!

வளவள வென்றே வார்த்தை யாடிப்பின்
தளர்ந்து போனவாய் தேடும் ஓய்வு!

தாவிச் சுழன்று தந்தங்க ளிடையே
கூவிச் சலித்த நாவின் தூக்கம்!

ஓசைய டக்கி உள்மனம் ஏதோ
பூசை தொடங்கிப் புரியும் யோகம் !

மொழிகளை முற்றும் ஒழித்துத் தாமே
விழிகள் நடிக்கும் ஜாடை நாடகம்!

நனவுகள் யாவுந் தமக்குத் தாமே
முனகிடும் இனிய மந்திரம் மௌனம்!

# நெஞ்சே! எனக்கு நீயே பகை!

காட்சிக் குதவிடுங் கண்கள்!
கேள்விக் குதவிடுஞ் செவிகள்!
பேச்சுக் குதவிடும் நாக்கு!
போக்குக் குதவிடும் கால்கள்!
மூச்சுக் குதவிடும் மூக்கு!
முயற்சிக் குதவிடும் மூளை!
ஏச்சுக் குதவிடும் நெஞ்சே!
ஏன்தான் படைத்தா னுன்னை?

ஒன்றை நினைப்பது நீதான்!
ஒன்றை மறப்பதும் நீதான்!
நன்றை விளைப்பதும் நீதான்!
நலிவை வளர்ப்பதும் நீதான்!
இன்றைக் கிருப்பதை நாளை
இலையென் றுரைப்பதும் நீதான்!
என்றுமே யுளதா யெதையும்
எண்ணுவா யென்பதும் நீதான்!

போகம் விரும்பியே யென்னைப்
போகப் பணிப்பதும் நீதான்!
தேகந் தளர்ந்ததன் பின்னே
தேம்பிக் கிடப்பதும் நீதான்!

மோகம் விளைந்து பெண்ணை
மோகித் திருப்பதும் நீதான்!
யோகம் விழைந்து பின்னே
யோசித் திருப்பதும் நீதான்!

நல்லா னென்பதாய்ச் சொல்லி
நாடச் செய்வதும் நீதான்!
பொல்லா னென்பதைச் சொல்லிப்
பிரியச் சொல்வதும் நீதான்!
இல்லாள் பிள்ளைகள் எல்லாம்
இன்பம் என்பதும் நீதான்!
எல்லாம் மாயையா மென்று
எடுத்துச் சொல்வதும் நீதான்!

உன்னால் பட்டனே பாடு;
ஒன்றிரண் டாமோ சொல்ல?
சொன்னால் மட்டுமே யென்ன;
சுமை தீரப் போவதே யல்ல!
இந்நாள் மட்டிலும் உனது
எண்ணமோ எளியனைக் கொல்ல;
எந்நாள் வந்திடக் கூடும்
ஏழைநான் உன்னையே வெல்ல?

# சிந்தனை

உளப்பாம் புரிக்குஞ் சட்டை;
உடல் மறந் திருக்கும் நிட்டை!
வெளிப்பாழ் நினை வொழிந்து
உள்ளுணர் வூறுங் குட்டை!

நினைப்பாந் தாய் வயிற்றில்
நிமிடமாய்ப் பிறக்கும் பிள்ளை;
நுனிப்புல் மேய்ந்த வாறே
மனப்புள் கடக்கும் எல்லை!

தனக்குள் பேசும் பேச்சு;
தனிமையில் போடும் நீச்சு!
கணக்கில் வாரா வண்ணம்
கற்பனை யளக்கும் எண்ணம்!

# பிறவிப் பயன்

மறுபடியும் எனைப் படைத்தால்
மரமாகப் படைத்து விடு!
மரமாகப் படைத்து விட்டால்
மற்றவர்க்கு நிழலாவேன்!

மறுபிறவி என்றிருந்தால்
மழைமுகிலாய்ப் படைத்துவிடு!
மழை முகிலாய்ப் படைத்து விட்டால்
மற்றவர்க்கு நீராவேன்!

நாயகனே! எனைப் படைத்தால்
நாயினமாய்ப் படைத்து விடு!
நாயினமாய்ப் படைத்து விட்டால்
நன்றியுடன் நானிருப்பேன்!

காவலனே! எனைப் படைத்தால்
கால் நடையாய் படைத்துவிடு!
கால் நடையாய்ப் படைத்து விட்டால்
பால் பொழிந்து பசிதீர்ப்பேன்!

இதுபோல ஏழ்பிறப்பு
ஏழையெனக் கிருந்தாலும்
எதுபோல நினைப்பாயோ?
அதுபோலப் படைத்துவிடு!

மறதியிலும் இறைவா! நீ
மனிதனெனப் படைக்காதே!
ஒரு பயனும் மனிதனெனும்
பிறவியினால் கிடைக்காதே!

# நான் தான் மனிதன்

ஆசை நெஞ்சில் அரும்பியதில்லை
ஆரையும் நானும் விரும்பியதில்லை!
பாசம் என்னைக் கொன்றதுமில்லை
பந்தம் என்னைத் தின்றதுமில்லை!

கோபம் என்னைச் சுட்டதுமில்லை
காமம் என்னைத் தொட்டதுமில்லை!
தாபம் என்னைக் கண்டதுமில்லை
தன்னை நொந்து கொண்டதுமில்லை!

மாற்றார் குடியைக் கெடுத்ததுமில்லை
மற்றவன் பொருளை எடுத்ததுமில்லை!
வேற்றார் தயவை விழைந்ததுமில்லை
வேடம் போட்டுக் குழைந்ததுமில்லை!

காசைத் தேடிப் போனதுமில்லை
காசுக் கிரையாய் ஆனதுமில்லை!
மாசை மனத்தில் வைத்ததுமில்லை
மொழியால் செயலால் பொய்த்ததுமில்லை!

பூரணமான பண்பின் எல்லை;
புவிமேல் என்போல் எவனும்இல்லை!
காரணம் நானோ பிறவாப்பிள்ளை;
கருவறை விட்டு வரவேயில்லை!

**கவிஞர் வாலி**

# விரும்பியேற்க வேண்டியவை

எல்லோர் மனமும் இனித்திடப் பேசல்!
கல்லார் தமக்குக் கல்வி யுரைத்தல்!
சொல்லால் செயலால் ஒன்றி யிருத்தல்!
பொல்லாங் குரைக்கப் பயந்து நடுங்கல்!
இல்லாளிடமே இன்பம் வேண்டல்!
நல்லோர் உறவே நாடி நடத்தல்!
வல்லான் பாதம் வழுத்தி வணங்கல்!

செல்லா வழியில் செல்லா திருத்தல்!
கொல்லா விரதம் கொள்கையாய்க் கொள்ளல்!
அல்லா தனவை அன்றே தள்ளல்!
இல்லா னோடு இருப்பதைப் பகிர்தல்!
நல்லால் போலே நிழல் கொடுத் துதவல்!
இத்தனை நல்ல இயல்பு களைத்தான்
வித்தக ரானோர் விரும்பி யேற்பரே!

# விட்டொழிக்க வேண்டியவை

துட்டர் சகவாசம்;
தூயோரைப் புழுதிவாரித்
தூற்றுஞ் சுபாவம்;
தானெனும் அகம்பாவம்
குட்டை மனப்பான்மை;
கோள்சொல்லிப் புறம்பேசி
ஒற்றைச் சாண்வயிற்றை
ஓம்பிடுங் கேவலம்!

பேச்சைப் புரட்டல்;
பெருந்துயரஞ் சூழுங்கால்
பேராண் மையின்றிப்
பெட்டைபோல் புலம்பல்!
கூச்சம்விட் டிரத்தல்;
கூர்மதியை நேரின்றிக்
கோணல்பல தோன்ற
நாணல்போல வளைத்தல்!

பகலில் பெருந்தூக்கம்;
பாழ்சோம்பல் ஒன்றேதன்
பெருஞ்சுக மாயெண்ணிப்
போதழிக்குஞ் சிறுமை!

கவிஞர் வாலி

நகங்களைக் கடித்தல்;
நல்லொழுக்கம் பேணாது
நோய்வாய்ப் பட்டவனாய்
பாய்மேல் படுத்தல்!

அதிகச் சாப்பாடு;
ஆகாவழி நடந்து
ஆசையடங் காத
அழுக்கு மனக் காழ்ப்பு!
உதிரக் கொதிப்பு;
உணர்ச்சிக் கடலாடி
ஊரார்க்கு முற்றார்க்கும்
ஊறிழைக்கும் புத்தி!

தாய்த்தமிழைப் பேணாமை;
தன்னாட்டை எண்ணாமை;
தெய்வந்தான் வினைமுற்றுஞ்
செய்வதென் றறியாமை!
வாய்ப்பதன மில்லாமை;
வாய்மையிலே நில்லாமை;
ஒரு நெறியில் ஒரு நிலையில்
ஒரு மனதாய்ச் செல்லாமை!

சான்றோரைப் போற்றாமை;
சுயமாகத் தானுழைத்துச்
சுகிப்போரைக் காணுங்கால்
சொல்லொணா ஆற்றாமை;
ஈன்றரை மதியாமை;
எளியோருக் குதவாமை;
இத்தனையும் ஒருமனிதன்
விட்டொழிக்க வேண்டியன!

# மெய்

பெண், ஆண் இருவர் பிசைந்த மண்ணில்
எண்சாண் உயரம் எழும்பிய வீடு;

மனமெனும் மாய மானதன் இச்சையாய்த்
தினமும் உலாவித் திரிந்திடுங் காடு!

உயிரெனும் புள்ளை உள்ளே வைத்திட
அயன்தன் விதிப்படி ஆக்கிய கூடு;

வாலிபம், முதுமை ஆகிய கவிதையைக்
காலம் எழுதிடக் கைக்கொளும் வீடு!

தசைநார் என்னும் தந்திகள் கொண்டு
இசைபெற அன்னை இயற்றிய வீணை;

தானெனும் அகந்தை தாங்காச் சுமையாய்
ஆனதும் ஒருநாள் அடிபடும் பானை!

பந்தம் என்னும் பிள்ளையத் தாங்கி
அந்தம் வரையில் ஆடிடும் ஏணை;

பொய்யாய் முடிவில் போவதைத் தமிழில்
மெய்யாய்ப் புலவர் மொழிவது வீணே!

# வாய்

நகையெனும் நகைக்கோர் கடைத்தெரு தான்வாய்;
நாவெனும் நாவாய் நீந்திடுங் கால்வாய்!
வகைவகை யுணவே வாய்தன் வருவாய்
வார்த்தைக் கெல்லாம் வாய்தா னேதாய்!

வயிறெனும் மனைக்கு வாய்தான் வாயில்;
வாயிலாம் வாய்க்கு உதடுதான் கதவு!
எயிறுகள்; பற்கள் வாய்நிலப் புற்கள்;
எச்சில் என்பதோ வாயின் வியர்வை!

புகைத்திடுங் காலை வாயொரு சூளை;
புசித்திடும் வேளை வாயொரு ஆலை!
நகைத்திடும் போதோ வாயொரு சோலை;
நாளெல்லாம் வாய்க்கு எத்தனை வேலை!

வாயெனும் தாய்க்கு ஞானப் பிள்ளை
வாய்மைதான்; பொய்யோ ஊனப் பிள்ளை!
சேயைப் பொறுத்தே தாயின் மதிப்பு;
வாய்க்கும் அதுவே; ஊமைவாய் மலடு!

# கண்

ஆசைச் செய்திகள் அதிகம் நிரப்பி
அன்பு மனந்தான் அச்சிடும் ஏடு;
ஓசை தவிர்த்து ஊமை மொழியில்
ஊங்களுக் கிடையே உலவுந் தூது!

அயலா ரெவரும் அண்ட வொண்ணாத
அழகு விழியாளின் அந்தப் புரங்கண்;
மயலால் தினமும் துயிலில் தழுவும்
கனவு நாயகன் மனையாள் தான்கண்!

உவகை; அழுகை இருகை பட்டால்
உடனே யொழுகுந் தண்ணீர்ப் பானை;
கவலை, களிப்பு காவியந் தன்னைத்
திவலை நீரால் தீட்டும் பேனா!

பகலவன் காயும் பகலா னாலும்
பாதை தெரிந்து பாதம் நடக்க
அகல விரிக்கும் அழகிய கண்ணாம்
அகல்விளக் கிலையேல் பகலும் இருட்டாம்!

எண்சா ணுடலில் எத்தனை கண்கள்?
எண்ணிப் பார்த்தால் இருபத்தி மூன்று!
முகக்கண் ணிரண்டு அகக்கண் ணொன்று;
நகக் கண் காண்க இருபது என்று!

இத்துணை கண்கள் இருந்தாற் கூட
இயற்கை வைத்த எழில்வள மெல்லாம்
முற்றும் காட்டுதல் முகக்கண் தானே;
முதற்கண் அதற்கு நன்றி யுரைப்போம்!

# காது

ஓசைப் பெண்ணாள் உரைப்ப தனைத்தும்
ஒன்று விடாமல் உடனுக் குடனே
ஆசை நாயகன் அறிவழ கன்பால்
ஓதி யுணர்த்துந் தூதுதான் காது!

தூசு நுழைந்தால் தட்டிக் கேட்கத்
துணியாக் கோழைப் பணியாள் காது;
ஏசும் ஏச்சோ புகழும் பேச்சோ
எதையுந் தாங்கும் இதயம் காது!

தலையாம் தாய்க்குத் தலைச்சன் பிள்ளை
கலைசேர் மூளை; காதுக ளிரண்டும்
ஒன்றாய்ப் பிறந்த இரட்டைப் பிள்ளை;
ஒன்றை யொன்று பார்த்ததே யில்லை!

குருவின் கைகள் திருகும் போதும்
குரும்பை யெடுக்கக் குடையும் போதும்
கடுக்கன் மாட்டக் குத்தும் போதும்
இடுக்கண் பலவும் ஏற்குங் காது!

கற்றறி வாளரின் கருத்தினைக் கேட்டல்;
நற்றமிழ்; நல்லிசை நலங்களைக் கேட்டல்;
உற்ற பெருஞ்சுகம் உயர்செவிக் கெனினும்
மற்றுமோ ரின்பம் ஒட்டுக் கேட்டல்!

# மூக்கு

உடலெனும் வீட்டின்
உள்ளே இருக்கும்
உயிரடுப் பெரிய
உதவும் விசிறி;
உடன்பிறப் பாகிய
உறுப்புக ளுறங்கி
ஓய்வெடுக் கையிலும்
உழைக்குங் கருவி!

காற்றை உண்ணல்;
காணாப் பொருளை
நாற்றங் கொண்டே
இனங்கண் டறிதல்;
சீற்றம் வருங்கால்
சீறல்; இவையால்
மூக்கும் பாம்பும்
ஓரின மாகும் !

மூக்கின் உள்ளே
முளைத்த முடிதான்
மூச்சுக் காற்று
மெல்ல நடத்தும்
போக்கு வரத்தில்
புழுதி யிருந்தால்
சோதித் தனுப்புஞ்
சுங்கச் சாவடி!

உளிமூக் காயினும்,
ஒழுங்கா யில்லா
நெளிமூக் காயினும்,
நீண்டு வளைந்த
கிளிமூக் காயினும்,
கிளர்ச்சி யூட்டும்;
சளிமூக் கொன்றே
சங்கடஞ் செய்யும்!

# முனியன் எனக்கு இனியன்

மாதம் ஓர்முறை முனியன் வசம்போய்
முடித்திருத் தலென் நெடுநாள் வழக்கம்;
ஆதர வாளர்கள் ஆயிரம் என்போல்
அவனுக் கமைந்ததில் அதிசயம் இல்லை!

சிகையலங் காரம் செய்வதில் நிபுணன்;
சிரித்துப் பழகுவான்; சுதந்திரப் பிரியன்;
வகைவகை யாக வளர்முடி வாரி
வண்ணப் படுத்தும் வித்தையில் மன்னன்!

கத்தியும் கத்தரிக் கோலும் அவன்கை
உத்தரவுப் படி கொய்யும்; கொரிக்கும்!
சுத்தம் அவனது சொல்செய லென்று
சோப்பு நுரையே சாட்சிய முரைக்கும்!

'அண்ணாச்சி! வாங்க! ஆச்சிது; நீங்க
அடுத்தது!' என்று அமரச் சொல்லி
பண்ணார்ந்த மொழியில் பரிவுடன் பேசி
பற்பல ஏடுகள் படித்திடத் தருவான்!

பிறகு நம்மையோர் குறிச்சியி லிருத்தி
பிடர்வழி சுற்றியோர் பூந்துவாலை போர்த்தி
அறுவடை வேலையை ஆர்வமாய்த் தொடங்கி
அன்புசால் நண்பனாய் அளவளா விடுவான்!

கவிஞர் வாலி

அகவிலை ஏற்றம்; அரசியல் மாற்றம்;
ஆந்திரக் கிளர்ச்சி; அருந்தமிழ் வளர்ச்சி;
நகர்ப்புறச் சினிமா; நாடகம்; கிரிக்கெட்;
நாட்டு நடப்பு; நல்லது, கெட்டது;

ஆயின பலவும் அலசி யெடுத்து
அடுத்தவர் நெஞ்சம் கடுத்திடா வண்ணம்
நேய உணர்வை நாகாத் திடவே
நீள உரைகள் நிகழ்த்துவான் முனியன்!

இப்படிப் பட்டவன் இனிய முகந்தான்
ஏனோ இந்நாள் ஈயா டாமல்
குப்புறக் கவிழ்த்த குடம்போ லிருக்கும்
கூற்றை வினவினேன்; கூறினன் முனியன்:

"ஆடவர் பலபேர் அரிவையர் போல்முடி
அடர்த்தியாய் வளர்த்து அந்நா ளிருந்த
நாடக நடிகராய் நாட்டிடை உலவினால்
நம்மவர் செய்தொழில் நலங்குறை யாதோ?

மூக்கையுங் கண்ணையும் நீக்கியே மற்ற
முகமெல்லாம் முடியால் மூடிடும் இளைஞர்
போக்கினை எண்ணினேன்; 'பொக்'கெனச் சாய்ந்தேன்!
புரிந்ததா?" என்றே புலம்பினான் முனியன்!

"முனியப்பா! வீண் முனகல் வேண்டாம்;
மேலை நாட்டை மேவி யிருந்த
சனியப்பா இந்த சடைமுடி மோகம்;
சரியாய்ப் போகச் சிலநா ளாகும்!

அமெரிக் காவில் ஆரோ ஒருவன்
அப்ளக் குடுமி அமைத்துக் கொண்டான்
நமக்கு மதுவே நாக ரீகமாய்
நாளையே மாறும் நீயே காண்பாய்!

'உச்சந் தலையில் குடுமி விளங்க
உதவும் வகையில் முடியை வைத்து
மிச்சங் களைக முனியா!' என்பர்;
மலைப்பா" யென்றேன் முனியன் சிரித்தான்!

# சாத்தப்பன்

மாதம் மூன்றுமுறை
மனைதேடி வந்தழுக்கு
மூட்டை எடுத்துப்போய்
முனைமுறியாப் பச்சரிசிச்
சாதம்போல் வெளுத்துவரும்
சாத்தப்பன் எனக்கமைந்த
சலவைத் தொழிலாளி;
சலிப்பறியாப் பாட்டாளி!

வாரந் தவறாமல்
வாய்வார்த்தை பொய்க்காமல்
வாடிக்கைக் காரரிடம்
வருவதாய்ச் சொல்லிவைத்த
நேரந் தவ்றாமல்
நிச்சயமாய் வருகின்ற
நேர்மைக்குச் சாத்தப்பன்
நிகரற்ற பண்பாளன்!

இடுப்பணியும் பாவாடை
என்மனையா ளின்புடவை
என்சட்டை கைக்குட்டை
இளையோரின் காற்சட்டை
உருப்படிகள் அத்தனையுங்
குறையாமல் கிழியாமல்
உருப்படியாய்க் கொண்டுவந்து
ஒப்புவிக்கு மொழுங்குடையோன்!

எப்போதுஞ் சிரித்தமுகம்;
இருட்டைப்போல் கறுத்த உடல்;
எண்ணெய் முழுக்கறியா
திருக்கும் பரட்டைமுடி;
மற்போர் கற்போர்போல்
மார்பகலம்; வாள்பாய்ந்தால்
முனைமுறியுந் தோள்வலிமை;
மறத்தமிழன் சாத்தப்பன்!

இப்படிப் பட்டவனை
இன்று நான் கண்டவுடன்,
'ஏனப்பா! சாத்தப்பா!
இவ்வூரார் துணியெல்லாம்
துப்புரவாய்த் துவைக்கும் நீ
துளைதெரியும் அழுக்குடையைத்
தரித்திருப்பதேன்? தீராத
தரித்திரமோ? சொல்!' என்றேன்!

செப்பினான் சாத்தப்பன்:
"செலவுக்கும் வரவுக்கும்
சரிக்கட்டும் அடியேனின்
சம்பாத்தியம் என்றிருக்க
எப்படிநா னூரார்போல்
எழிலுடையை எனக்கென்று
ஏற்பதற்கு வாய்ப்புண்டு;
எல்லாம் நீ ரறியீரோ?

உடையினிலே கிழிசலுண்டு;
உள்ளத்தில் இல்லையய்யா!
உடையினிலே அழுக்குண்டு;
உள்ளத்தில் வெள்ளையய்யா!
உடல்சோர உழைப்போர்க்கு
உடையழகா உயர்வுதரும்?
விடைதருவீர்!" எனப்போனான்;
வீழ்ந்தேன் நான் சிந்தனையில்!

# தொழிலாளியைத் தூக்கிலிடுக

உலகத் தராசினைத்தன்
ஒருபக்க மேசாய்க்கும்
கலகப் பூச்சிகளே!
கவனிப்பீர்! கண்ணீரை
வார்க்குந் தொழிலாளர்
வர்க்கத்தை வாய்மையெனுந்
தூக்கில் இடுக; இட்டால்
தெரியுமேசரி யானஎடை!

ஒருதட்டில் புவிச்செல்வம்
ஒருசேர வைத்திடுக!
மறுதட்டில் தொழிலாளர்
மணிக்குலத்தை நிறுத்திடுக!
இருதட்டில் எத்தட்டு
எடைகூடுந் தட்டென்றால்
ஒருதட்டாம் தொழிலாளி
உளதட்டே தாழுமென்பேன்!

மண்டையின் உள்ளிருக்கும்
மூளையின் பெரும்புகழ்தான்
மண்டையின் மேல்முளைத்த
முடிகளுக் கிருப்பதில்லை;
முன்பலம் முதலீடென்று
முழுங்கிடுந் தொழிலதிபர்கள்
பின்பலந் தொழிலாளர்தான்
என்பதை ஏற்பதில்லை!

கவிஞர் வாலி

முன்கை நீட்டலின்றி
முழுங்கை நீள்வதுண்டோ?
பின்முது கெலும்பின்றிப்
பிடர்தான் நிமிர்வதுண்டோ?
பெருவிரல் உதவியின்றிப்
பேனாவைப் பிடிப்பதுண்டோ?
பெருந்தொழி லாளரின்றிப்
பெரும்பொருள் குவிப்பதுண்டோ?

நகக்கண் ணழுக்குடைத்து
நற்றொழி லாளருக்கு
அகக்கண் ணழுக்குடைத்து
ஆலையின் அரசருக்கு!
புதர்க்கண் படுத்திருக்கும்
புலிநிகர்த் தொழிலாளர்கள்
முதற்கண் இந்நிலைக்கோர்
முடிவினைக் காணல்வேண்டும்!

சங்கினை ஊதிவிட்டுச்
சாறெனப் பிழிந்தெடுத்துப்
பங்கினை மறுத்துரைத்தால்
பாட்டாளி விடுவதுண்டோ?
ஆக்கினைப் படிநடக்கும்;
அரசுநம் துணையிருக்கும்!
'பார்க்கலாம்' என்றிருந்தால்
பரவிடும் பெரும்புரட்சி!

# விறகு வெட்டி

கோழிக்கு முன்னெழுந்து பாய்சுருட்டி
கொல்லையிலே வேம்பாலே பல்துலக்கி
ஏழெட்டுச் செம்பெடுத்துக் குளித்துவிட்டு
'எடுத்துவா, பழஞ்சோற்றை!' என் றுரைத்து
'நாழியாச்சு, போது' மென வாய் கழுவி
நடந்திடுவான் கோடரியைத் தோள் தழுவி;
மோழையூர் தனவந்தர் முத்துச் செட்டி
மரக்கடையில் என்னத்தான் விறகுவெட்டி!

புகையிலையைக் கடைவாயில் கிள்ளிப் போட்டு
பிடர்முடியை முண்டாசில் அள்ளிப் போட்டு
வகைவகையாய் வந்திருக்கும் தேக்கும் பாக்கும்
வரிவரியாய் வாய்பிளக்க வெட்டித் தீர்த்து
நகைமுகத்தில் கருப்பேறக் கரஞ்சிவக்க
நரம்பொடிய நாள் முழுதும் விறகுடைத்து
தொகையெதுவோ அதைப் பெற்றுத் துணி முடிந்து
துயில் கொள்ளும் நேரத்தில் குடில் வருவான்!

வென்னீரை வெதுவெதுப்பாய்ப் போட்டு வைத்து
வீக்கமுடை தோள்பட்டை தேய்த்துவிட்டு
மன்னவனை நீராட்டித் தலைதுவட்டி
மீன்குழம்பைத் தேன்குழம்பா யுண்ணவைத்து
பின்னிவைத்த ஈச்சம்பாய் மேலிருந்தி
பழுப்பான களிப்பாக்கு வெற்றிலையை
மென்னுகின்ற பக்குவத்தில் மடித்துத்தந்து
மடிமீது படுத்திருப்பேன் மார்நிமிர்ந்து!

கவிஞர் வாலி

காய்கின்ற வெண்ணிலவு நோய்கொடுக்க
கண்ணாளன், கொடியிடையில் கைதடவி
காய்பறிக்கத் துடித்தெழுவான்; கொஞ்சநேரம்
காட்டாமல் சேலைக்குள் பூட்டிவைப்பேன்;
வாய்முத்தம் பரிமாற வசமிழப்பேன்;
வாங்கிக் கொள்! என்றவனும் விருந்தளிப்பான்!
ஓய்வெடுக்கும் ஆடைகள் ஒதுங்கி நின்று;
ஒருவர்க்கு ஒருவரேதான் ஆடையென்று!

# புத்தாண்டு

வேதமெனுங் கீதமதை
        வீணையிலே மீட்டுகின்ற
நாதமிகு நாயகியே!
        நாமகளே! நாள்தோறும்
ஓதுதமிழ்ப் புலவர்க்கு
        உதவுகின்ற ஞானமதை
ஏதுமறி யாதெனக்கும்
        எடுத்தியம்பு புத்தாண்டில்!

நாற்றமிகு தாமரையின்
        நடுவினிலே நாயகியாய்
ஏற்றமுட னெழுந்தருளி
        ஏனையாளுங் கலைமகளே!
ஊற்றுமிகு காவிரிபோல்
        உள்ளமதில் நல்லதமிழ்ப்
பாட்டுவர எனக்குதவு
        பூத்துவரும் புத்தாண்டில்!

சீதமிகு வெண்ணிலவை
        சிரிக்கின்ற விண்மீனை
ஆதவனை ஆழ்கடலை
        ஆடிவரும் பூங்காற்றை
காதலொடு பாடுதிறன்
        கைவரவே என்றனுக்கு
வேதவல்லி! நீயருள்வாய்
        விளைகின்ற புத்தாண்டில்!

**கவிஞர் வாலி**

மஞ்சுலவு வான்தொட்டு
　　மண்வரையில் நான்தொட்டு
கொஞ்சுதமிழ்க் கவிதையினால்
　　கோலங்கள் வரைதற்கு
நெஞ்சினிலே கற்பனையாம்
　　நெருப்பெரிய வேண்டாமோ?
துஞ்சுகின்ற என்மனத்தைத்
　　தொட்டெழும்பு புத்தாண்டில்!

கற்றறிந்த மேலோர்க்குக்
　　கலணியாய் நானிருக்க
உற்றவர்க்கும் மற்றவர்க்கும்
　　உயிர்த்துணையாய்ப் பணிபுரிய
சிற்றறிவே இல்லாத
　　சீவனென நானுயர
நற்றமிழின் நாயகியே!
　　நீயருள்க புத்தாண்டில்!

வீண்வம்பு வெறும்பேச்சை
　　வளர்க்கின்ற அரசியலும்
ஆண்மைக்கு சற்றேனும்
　　ஆகாத காரியமும்
ஊண்ஒன்றே பெரிதென்று
　　உயிர்காக்குங் கேவலமும்
வேண்டாத செயலென்று
　　விட்டொழித்தேன் புத்தாண்டில்!

நெய்யொழுகு நாவோடும்
        நஞ்சொழுகு நெஞ்சோடும்
பொய்யொழுகு வார்த்தையினைப்
        பரிமாறி உறவாடி
மெய்யன்பு இல்லாமல்
        மெய்வளர்க்கும் நாடகத்தைக்
கைவிட்டு நல்வாழ்வில்
        கால்வைப்பேன் புத்தாண்டில்!

ஒருசொல்லில் நில்லாமல்
        ஒருவழியே செல்லாமல்
ஒருகொள்கை இல்லாமல்
        ஒவ்வொருநாள் மனம்போலே
உறிதாவிப் பாலுண்ண
        ஓடுகின்ற பூனைக்குணம்
பரிதாவி நல்லாண்டில்
        போகட்டும் இலையென்று!

# தைப்பொங்கல்

தாய்வைத்த தமிழ்ப்பொங்கல்
தளதளெனப் பொங்கட்டும்!
வாய்வைத்த செங்கரும்பில்
வளர்சுவைதான் பொங்கட்டும்!

மனையெலாம் மகிழ்ச்சிவெள்ளம்
மளமளெனப் பொங்கட்டும்!
வினையெலாம் வெற்றியாக்கும்
வேலனருள் பொங்கட்டும்!

இலக்குமியாள் கடைக்கண்ணின்
இன்னருள்தான் பொங்கட்டும்!
கலக்கமிலாச் சிந்தனைகள்
கதிரொளிபோல் பொங்கட்டும்!

உழவர்பால் நன்றிசொலும்
உணர்வின்னும் பொங்கட்டும்
கிழவர்பால் இளமைநலம்
கிளுகிளெனப் பொங்கட்டும்!

மைவிழியார் மாதரிடை
மஞ்சள்நலம் பொங்கட்டும்
பொய்மொழியா மனிதரிடம்
புகழ்முற்றும் பொங்கட்டும்!

இன்னொருவர் நலம்பாடும்
இதயமெலாம் பொங்கட்டும்!
என்னருமைத் தமிழ்மொழியின்
இனிமையெலாம் பொங்கட்டும்!

பல்லுயிரும் பகர்ந்துண்ணும்
பொதுவுடமை பொங்கட்டும்!
தொல்லுலகில் உழைத்துண்போர்
தூயநலம் பொங்கட்டும்!

என்மனைபோ லெவர்மனையும்
இன்புறவே பொங்கட்டும்!
பொன்மனமே! நீமட்டும்
பகையுணர்வில் பொங்காதே!

# புத்தகம்

பிள்ளையில் படிக்கும் புத்தகம் மழலை
பள்ளியில் படிக்கும் புத்தகம் நட்பு
இளமையில் படிக்கும் புத்தகம் காதல்
வளமையில் படிக்கும் புத்தகம் வாழ்வு!

கட்டிலில் படிக்கும் புத்தகம் மனைவி
தொட்டிலில் படிக்கும் புத்தகம் மதலை
சட்டியில் படிக்கும் புத்தகம் சோறு
பெட்டியில் படிக்கும் புத்தகம் செல்வம்!

உறங்கையில் படிக்கும் புத்தகம் கனவு
கிறங்கையில் படிக்கும் புத்தகம் கள்ளு
உறவினில் படிக்கும் புத்தகம் காமம்
துறவினில் படிக்கும் புத்தகம் ஞானம்!

உவகையில் படிக்கும் புத்தகம் சிரிப்பு
உணர்ச்சியில் படிக்கும் புத்தகம் கோபம்
கவலையில் படிக்கும் புத்தகம் கண்ணீர்
கோவிலில் படிக்கும் புத்தகம் கடவுள்!

முதுமையில் படிக்கும் புத்தகம் ஏக்கம்
முடிவினில் படிக்கும் புத்தகம் தூக்கம்
பிறந்தது முதல்தான் எத்தனை படிப்பு
படித்ததை முடித்ததன் பரீட்சைதான் இறப்பு!

# எதிர் வீட்டுச் சன்னல்

எதிர்வீட்டுச் சன்னலண்டை
எப்போது மென்னிடத்தே
புதிர்போட்டுப் பேசுகின்ற
பூவிழிக ளிரண்டுண்டு;
அதிர்வேட்டுச் சிரிப்பின்றி
அரும்புநகை யிழையோடச்
சதிர்போட்டு நடைபயிலும்
சரசாவின் கண்களவை!

என்றவள் குடியிருக்க
எதிர்வீட்டில் வந்தாளோ
அன்றேயென் மனவீட்டில்
அட்டியின்றி நுழைந்திட்டாள்!
நின்றாடும் பூங்கொடியின்
நிழலாடும் போதெல்லாம்
அன்றாடம் அவளழகை
அருந்துவதே யென்வேலை!

மழைபோலும் அவள்பார்வை;
மஞ்சைபோ லென்மனது!
தழைபோலும் அவள்பார்வை;
துள்ளுமறி யென்மனது!
கழைக்கூத்தா(ம்) அவள்பார்வை;
கம்பம்போ லென்மனது!
இழைநூலா(ம்) அவள்பார்வை
நுழைஊசி யென்மனது!

கவிஞர் வாலி

பார்த்தபடி நின்றிருப்போம்;
பதிலுக்குப் பதில்நெஞ்சை
ஈர்த்தபடி நின்றிருப்போம்;
எதிருக்கு யெதிர்மேனி
வேர்த்தபடி நின்றிருப்போம்;
ஒருவர்க் கொருவர்தன்னைத்
தோற்றபடி நின்றிருப்போம்;
வார்த்தைபரி மாற்றமில்லை!

நாட்கள் நகர்ந்திருக்க
நெஞ்சினிலே ஆசையெனும்
பூக்கள் மலர்ந்திருக்கப்
பொழுதெலாங் காதலெனுந்
தீக்குள் விழுந்திருக்கத்
தேடியெனைப் பார்ப்தற்கு
ஊர்க்குள் நான்மதிக்கும்
உயிர்த்தோழன் சீனிவந்தான்!

உள்ளத்தில் ஒளிந்திருக்கும்
உணர்ச்சிகளை அவனிடத்தே
வெள்ளத்தைப் போல்கொட்டி
விவரத்தைக் விளக்கிவிட்டுக்
கள்ளக் காதலைக்
கடிமணமாய் முடிப்பதற்கு
உள்ள உபாயத்தை
'உணர்ந்திடுக' என்றுரைத்தேன்!

சீனிசொன்னான்: 'கேள்!
சீனிபோ லுனக்கினிக்கும்
மேனியாள் சரசாவை
முன்னமே நானறிவேன்!
தேனிதழ்; தித்திக்கும்பேச்சு;
தேரெனக் கடைந்தவடிவம்;
ஆணினம் அடிமையாகும்
அழகுதான்; ஆனால்ஒன்று,

சன்னலி னிடையேநின்று
சந்தித்து நித்தமுன்னை
இன்னலில் நிறுத்துகின்ற
இனியவள், கண்ணிலாதாள்!
பொன்மகள் பொட்டைக்கண்ணால்
பார்த்ததில் பொருளொன்றில்லை;
உன்னையே பார்ப்பதாக
உருகினாய், முட்டாளப்பா!'

நண்பனால் தெரிந்ததென்ன?
கண்ணிலை காதலிக்கு!
பண்டொரு மொழிதானென்ன?
கண்ணிலை காதலுக்கு!
இன்னமுங் குருடியைத்தான்
என்மன மேற்பதுண்டோ?
சன்னலைச் சார்த்திவிட்டேன்;
சங்கடந் தீர்ந்ததய்யா!

# முதுமை

பற்றுக் கெல்லாம் புலன்கள் வைக்கும்
முற்றுப் புள்ளி முதுமை! – உடல்
இச்சை விடைபெற இறைவன் காட்டும்
பச்சைக் கொடிதான் முதுமை!

கூட்டம் முடித்துக் கும்பல் பாடும்
நாட்டுப் பண்போல் முதுமை!– முதல்
போட்டு நடத்திய கடையை மூடிப்
பூட்டுப் போடுதல் முதுமை!

நரையுந் திரையும் நல்லுட லைத்தான்
இரையாய்த் தின்பது முதுமை!– தாயின்
கருவறை தோன்றிக் கதிர்முற் றிடவும்
அறுவடை செய்வது முதுமை!

நின்றிடு முன்னே நெடுமூச் சுரைக்கும்
நன்றி யுரைதான் முதுமை! – நீள்
நித்திரை கொள்ள உத்தர வானதன்
முத்திரை தானே முதுமை!

கடவுள் எழுதிய படைப்பு நூலில்
கடைசிப் பக்கம் முதுமை!– ஐம்
புலன்கள் புரிந்த பிழைகளுக் கெல்லாம்
பலன்கள் சொல்வது முதுமை!

# பாவ மன்னிப்பு

கைவழி கந்தன்
கவ்விய வேலைக்
கருத்திற் கொள்ளாமல்
பொய்மொழி மடவார்
மைவிழி வேலைப்
புத்தியிற் கொண்டேனே!
தண்மதி கொஞ்சும்
ஷண்முகந் தன்னைத்
துதித்திட நினையாமல்
கண்மதி கெடுக்கும்
பெண்முக மொன்றே
கதியெனக் கிடந்தேனே!
குமரன் வாழுங்
குன்றுகள் தோறுங்
கும்பிடச் செல்லாமல்
குமரிகள் நெஞ்சக்
குன்றுகள் தொட்டுக்
குலவிக் கிடந்தேனே!
தேவன் முருகன்
கோவில் நடந்து
காவடி சுமக்காமல்
தேவியராம் பெரும்
பாவியர் தமது
சேவடி சுமந்தேனே!

காலன் வருமுன்
காக்கும் கோழிக்
கொடியைக் போற்றாமல்
ஏலங் குழலார்
இடையாங் கொடியை
ஏந்திக் கிடந்தேனே!
வள்ளி மணாளன்
புள்ளி மயில்மேல்
வாழ்த்துப் பாடாமல்
அள்ளி யணைக்கும்
பள்ளி மயில்களை
அர்ச்சித் திருந்தேனே!
வைதா ருக்கும்
வாழ்வு கொடுக்கும்
வையாபுரி யோனே!
கைதா! இந்தக்
கடையோ னுய்யக்
கந்தப் பெருமானே!
மெய்யால், வாக்கால்
மனத்தால் நின்னடி
மேவா திருந்தேனே!
அய்யா! நீயெனை
ஆட்கொள் ளாமல்
அடியேன் திருந்தேனே!

# நான்

முச்சங்கப் புலவர்முதல்
முந்தாநாள் புலவர்வரை
இச்சை மதுவெனவே
எண்ணிக் குடித்ததிலே
மிச்சம் மிகுதியுள்ள
முத்தமிழ்ப் பாலருந்தி
கொச்சைக் கவிபாடும்
பச்சைக் குழந்தைநான்!

ஓசை நயங்காட்டி
உட்பொருள் வசியங்காட்டி
ஆசைப்படு புலவர்
அனைவர்க்கும் பொதுச்சொத்தாய்
வேசை இனம்போலும்
விளையாடுங் கவிப்பெண்ணை
மீசை முளைக்குமுன்னே
மோகித்த சிறுவன்நான்!

உள்ளவயல் நெடுக
உணர்வெனும் ஏர்கொண்டு
மெள்ள உழுதுவிட்டு
மேவுகின்ற கற்பனையாம்
நல்ல விதைதூவி
நற்கவிதைப் பயிராக்க
வல்ல புலவர்தம்
வரிசையிலோர் உழவன்நான்!

**கவிஞர் வாலி**

எதுகை மோனையெனும்
இருகரையுந் தொட்டபடி
புதுமைக் கருத்துவிளை
பூம்பொழிலில் பாய்கின்ற
மதுரத் தமிழ்நதியின்
மடியினிலே நெடுங்காலம்
வதியும் மீன்களுக்கு
வலைவீசும் மீனவன்நான்!

# குறள்

மயிலை மாநகர் தோன்றி வளர்ந்த
மாமுனி யன்றோ, மனித குலத்தின்
துயிலை நீக்கிக் கண்கள் விழிக்கக்
கூவி யெழுப்பிய பொற் சேவல்!
அயிலை வடித்த விழியாள் வாசுகி
அன்பு செலுத்திய நாயக னன்றோ
வெயிலில் வாடிய பயிர்களுக் கமுதை
வார்த்திட வந்த கார்கொண்டல்!

தப்பால் தவற்றால் தாழ்ந்து கிடக்குந்
தலைக ளனைத்தும் பனைபோ லுயர
முப்பால் வழங்கிய முனிவன் பேரை
முப்பொழு தும்நீ செப்பு மனமே!
உப்பா லுயரும் உணவினைப் போலே
ஓசை யெழுப்பிக் கத்துங் கடலுக்
கப்பால் கூடக் கன்னித் தமிழ்மணம்
கமழ்ந்ததற் கெல்லாங் காரணங் குறளே!

'வெள்ளத் தனைய மலர்நீட்டம்; நம்
உள்ளத் தனையது உயர்' வென்றான்!
'உள்ள வரைக்கும் ஈதல் இசைபட
வாழ்தல் ஊதியம் உயிர்க்' கென்றான்!
எல்லாங் கற்றும் 'வாலறிவன் தாள்
ஏத்தா விடில்பய னிலை' யென்றான்!
சொல்லா ததுவே இல்லாத படி
சொல்லிய நூலாய்க் குறள் கண்டான்!

**கவிஞர் வாலி**

ஆலம் விதையுள் ளடங்கி யிருக்கும்
அகண்ட மரம்போல், அத்தனை குறளும்
நீளம் குறைவாய்த் தோற்றிய போதும்
நுவலற் கரிய கருத்துக் கடலின்
ஆழங் கொண்டதை மறுத்தவ ரில்லை;
ஆதலி னால்தா னாயி மாயிரங்
காலங் கடந்துங் குறளின் கீர்த்தி
குவலய மெங்குங் குவியக் கண்டோம்!

# கவிதை

அழுக்கைச் சுமக்கும் கழுதை போலே
எழுத்தைச் சுமப்பது கவிதை யல்ல!
அகரந் தொடங்கி அக்கன்னா வரை
தகவல் தருவது அகவல் அல்ல!
யாப்பும் இசையும் காப்பாய்க் கொண்டு
பூப்பவை யாவும் பனுவல் அல்ல!
பொய்யுள் பிறப்பது செய்யுள் அல்ல;
கொய்வன வெல்லாங் கொய்யா வல்ல!

அவலச் சுவையே அழுக்காய்ச் சுமந்து
கவலைச் சேற்றில் கழன்று விழுந்து
கவர்ச்சிச் சுனையில் தோய்த்துத் துவைத்து
சவமாய் மெல்லச் சாயம் வெளுத்து
நவமா யிருந்த நூல்கள் பிரிந்து
தவறுக ளென்னுந் துளைகள் விளைந்து
தவிக்கும் மானுடச் சட்டையை எந்தக்
கவிதைத் திடுமோ? கவிதை அஃதே!

உதிக்குங் கதிரோன் உறங்கும் வரையில்
மதிக்கும் வகையில் மாடா யுழைத்து
விதிக்குங் கூலியில் உயர்வினைக் கேட்டால்
பதுக்கிய செல்வம் பதுக்கியே வைத்துப்
பதைக்கும் ஏழையின் பங்கினை இலையெனக்
கதைத்தே காலங் கழிக்குங் கும்பலை
உதைக்கக் கிளம்பும் உரிமைப் புரட்சியை
விதைக்குங் கவியே கவிதையென் போமே!

கவிஞர் வாலி

# பேசும் நாவும் பேனாவும்

பேசும் நாவும் பேனாவும்
பெருமைக் குரிய செயலாற்றும்;
தூசு படிந்த திருநாட்டைத்
துப்புர வாக்கும் பணியாற்றும்!

திரு. வி. க. கைப் பேனாதான்
முருகன் அழகை காட்டியது;
அருவிப் பெருக்காந் தமிழ்நடையால்
அகிலத்தைக் குளிப்பாட் டியது!

சத்திய மூர்த்தியின் நாவன்மை
சரஞ் சரமாகக் சொல்லம்பால்
எத்தி யெறிந்தது வெள்ளையனை;
எங்கிருந் தோயிங்கு வந்தவனை!

மறைமலை யடிகள் பேனாதான்
மறைந்து கிடந்த தனித்தமிழை
நிறைவா யேட்டில் எழுதியது;
நீண்ட பெரும்புகழ் தழுவியது!

ஜீவா னந்தம் நாவால்தான்
சமதர்மம் எனும் தத்துவமே
பூவாய் விரிந்தது தென்னாட்டில்;
புரட்சி வெடித்தது இந்நாட்டில்!

மு.வ. பேனா முனைதானே
முத்து முத்தான கருத்தெல்லாம்
தூவித் தெளித்தது தமிழ்மொழியில்;
தம்பி! தங்கை! மடல் வடிவில்!

பெரியார் நாதான் சாதியெனும்
பேயை நாட்டில் ஓட்டியது;
அறிவா லெதையும் ஆராயும்
திறனுக் கடிக்கல் நாட்டியது!

பாரதி யாரின் பேனாதான்
பயமில் லாமல் அந்நாளில்
பாரதிரத் தமிழ் தீட்டியது;
பா மாலைகள் சூட்டியது!

அண்ணா செந்நாப் புலமைதான்
ஆயிர மாயிரம் மேடைகளில்
பண்ணார் தமிழை ஏற்றியது;
புதுமைக் கோலங் காட்டியது!

கல்கி யெடுத்த பேனாதான்
கதை கட்டுரைகள் வரலாறு
பல்கி வளர்ந்திடப் பைந்தமிழில்
படைத்துச் சென்றது புதுமுறையில்!

வாய்மை கொண்ட பேனாவும்
வாய்மை கொண்ட நன்னாவும்
தூய்மைப் படுத்துஞ் சாதனமாய்த்
தூயோர் கொள்வர் எந்நாளும்!

**கவிஞர் வாலி**

# சிட்டும் சிறு வீடு

சிட்டொன்று என்வீட்டுள்
சிலநேரஞ் சிறகடித்து
சட்டென்று சன்னல்வழி
சரம்போலே பாய்ந்தோடும்;
விட்டத்தில் வீடுகட்ட
விஸ்தார இடங்கண்ட
திட்டத்தைப் பெட்டையிடந்
தெரிவித்துத் திரும்பிவரும்!

வரும்போது இருகூறாய்
வாய்பிளந்த நெல்லொத்த
சிறுமூக்கில் வைக்கோலுஞ்
சருகுகளுஞ் சுமந்துவரும்;
ஒருபக்கந் தலைசாய்த்து
ஓசையேதுங் கிளப்பாமல்
குருவிக்கண் வீடெல்லாந்
துருவிப்பின் கூடுகட்டும்!

ஆளரவங் கேட்டாலோ
அப்படியே விட்டுவிட்டு
நீளரவம் வரக்கண்டு
நீர்தாவுந் தவளைபோல்
சாளரத்தின் வழியோடிச்
செடியொன்றில் உட்காரும்;
தோளைத்தன் மூக்காலே
சொறிந்தபடி இளைப்பாறும்!

சாதகமாய் மறுபடியும்
சமயம்வரக் கண்டவுடன்
மீதமுள்ள குப்பைகளை
மீண்டுமது எடுத்துவரும்;
மாதமொன்று ஆவதற்குள்
முழுமையாய்க் கூடுகட்டிக்
காதலியைக் கூட்டிவந்து
குடித்தனத்தைத் தொடங்கிவிடும்!

ஆதரவா யிருசிட்டும்
அலகாலே முத்தாடி
காதலித்து முட்டையிட்டுக்
குஞ்சுகளைப் பொரித்துவிடும்;
போதும்வரை உணவளித்துப்
பிள்ளைகளைப் பெரிதாக்கி
பாதங்களை உள்மடித்துப்
பறப்பதற்குப் பயிற்சிதரும்!

சிட்டுகளின் சிறுகுடும்பம்
சிறப்பான இல்வாழ்க்கை
ஒட்டுறவாய் வாழுமுறை –
ஒவ்வொன்றும் நான்பார்த்து
கட்டவிழ்ந்த மானிடரின்
கலக்கமுறும் வாழ்வெண்ணி
விட்டபெரு மூச்செல்லாம்
வெளிக்காற்றில் போய்க் கலக்கும்!

# காஞ்சிப் பெரியவாள்

பார்த்த மாத்திரத்தில்
பாவத்தை யலம்புகின்ற
தீர்த்தப் பெருக்கை;
திருவாசகத் துட்கருத்தை
கூர்த்த மதியால்ஞானக்
குறிப்புணர்த்துந் தெய்வ
மூர்த்தத்தை; முழுமுதலை,
முன்கண்டு தெண்டனிட்டேன்!

கீழ்த்திசைக் கதிரோன் சற்றே
கிணற்றோரங் கிளர்ந்தெழுந்து
வாழ்திசை பாடுதற்கோ
வந்தனன் என்றயர்ந்தேன்;
சீழ்பிடித் திருக்கும்உள்ளச்
செம்புண்ணைச் சீலமென்னும்
வாள்பிடித் தறுத்தாற்றும்
வைத்தியனோ என்றதிர்ந்தேன்!

அத்வைதத் தத்துவத்தின்
　　ஆழத்தை யளந்துரைக்கும்
வித்வத்தை; வேதமென்னும்
　　வித்தெழுந்த விருட்சத்தை;
தத்வார்த்தத் தேன்பிலிற்றுந்
　　தாமரையை; தருமத்தின்
நித்யஸ் வரூபத்தை,
　　நேர்கண்டு நமஸ்கரித்தேன்!

பொன்னொத்த மேனியனைப்
　　புண்ணியனை; புவியனைத்துந்
தன்னொத்த நிலையில்வைத்துத்
　　தயைகாட்டுஞ் சங்கரனை;
மின்னொத்த விழியால்வினை
　　முற்றும்பொசுக்குந் தீப்பிழம்பை;
என்னொத்த பாவிக்கும் அருள்
　　இறைவனை, ஏத்திநின்றேன்!

வலிமைக்கும் வலிமையான
வல்லவனை எம்முன்னால்
எளிமைக்கும் எளிமையாக
எழுந்தருளக் கண்டவுடன்,
'கலிமொய்க்கும் உலகத்தைக்
காப்பாற்றும் பெருந்தகையே!
நலிவில்லா நன்னெஞ்சை
நல்கிடுவீ' ரெனத் துதித்தேன்!

குடிசைவாழ் கோமகனை;
கோலோச்சுங் குணக்குன்றை;
படிமிசை வந்துதித்த
பரம்பொருளை; அருட்புனலின்
வடிகாலை; ஒளியுமிழும்
விடிவிளக்கை; அருமறையின்
அடிவேரை; ஆசானை,
அர்ச்சிப்பா யென்மனமே!

# முக்கூர் வாழ் முனிவர்

க்ட்செவிமே லுட்கார்ந்தே
கதியருளும் பதியெனவாழ்
ரட்சகனைப் பற்றியுயர்
ரகசியங்கள் எடுத்தோதி,
உட்சுடராய் எமக்குள்ளே
ஊடுருவி ஊழ்வினையாம்
முட்செடியைக் களைபவனை
முக்கூரில் நான் கண்டேன்!

பெரும்பூதூர் யதிராசன்
பேரருளால் பாரெல்லாம்
இறும்பூதெய் திடவேதான்
இவ்வடிவவை ஏற்றனனோ?
திருமணியாய்த் தோன்றியநல்
தேசிகனே தயைகூர்ந்து
குருமணியாய் முக்கூரில்
கொலுவிருக்க வந்தனனோ?

சடகோபன் மறுபடியும்
சகத்தினிலே சனித்தானோ?
அடடாவோ! அடியாரை
ஆட்கொளவே நினைத்தானோ?
வடகலையார் வைணவத்தார்
வழிபடவும் வளமுறவும்
உடலெடுத்து முக்கூரில்
உலவுவதற் கிசைந்தானோ?

'இரணியனைத் தொடைசேர்த்து
இருகூறாய்க் கிழித்தவனைச்
சரணடைவீர்' என்றெம்மைச்
சந்ததமுந் தன்வழியே
கருணையுடன் வரச்சொல்லிக்
கைகாட்டும் மெய்விளக்கை,
மரணமிலாப் பெருவாழ்வை
முக்கூரில் நான் கண்டேன்!

விசிட்டாத் வைதத்தின்
        விரிவுரையை; அறநெறியில்
வசிட்டன் எனவிளங்கும்
        வரமுனியை; வைணவந்தான்
நசிக்கா திருக்குமாறு
        நீர்பாய்ச்சும் அருள்மழையை,
வசிக்கும் இடஞ்சென்று
        வணங்கிடுவோம்! வா! மனமே!

செந்நிற வேட்டிகட்டிச்
        செங்கோலைக் கையில்ஏந்தி
பன்னிரு திருமண்சாற்றிப்
        பொன்னிற மேனிமின்ன
மன்னவன் அழகியசிங்கன்
        மலரடி மேவியிருக்கும்
நன்னகர் முக்கூரேதான்
        நமக்கெலாம் ஸ்ரீவைகுந்தம்!

# காவிரி

திரைகளே உடைகளாய்,
திரைகளில் தோன்றிடும்
நுரைகளே மலர்களாய்,
நுரைகளால் கழுவிடும்
கரைகளே கரங்களாய்,
கரைகளில் தோணிசேர்
துறைகளே தோழியாய்,
துறைகளில் துவைப்பவர்
கறைகளே மச்சமாய்,
கறைமுகில் கவிந்திடும்
வரைகளே காவலாய்,
வரைகள்வாழ் புட்களின்
உரைகளே கீதமாய்,
உரைத்தமிழ் நடையென
விரைகிறாள் காவிரி,
திரைகடல் தேடியே!